Regd. No. 2975

ஸ்ரீ

# ஸ்ரீ ராமாநுஜன் 322, 323

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
Mahamahimopadhyaya
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM–631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

---

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975ஷு சித்திரை, வைகாசிமீ

## ஸ்ரீ ராமாநுஜனுக்குச் சந்தா வரவுகள்

(முன் தொடர்ச்சி)

T.V. கோபாலஸாமி ஐயங்கார், Madras
K. வரதேசிகன், Advocate, விழுப்புரம்
M. R. ஸ்ரீநிவாஸன், நாக்பூர்
L. நரஸிம்ஹன், சென்னை-5
M. வரதராஜன், திருப்பதி
Dr. பார்த்தஸாரதி, ஆக்ரா
நாராயணன், B.A., B.T., தஞ்சாவூர்
R. ஸம்பத், சென்னை-17
ராமஸ்வாமி, தஞ்சாவூர்
Dr. V. V. ராமாநுஜம், சென்னை-5
T. A. பாஷ்யகாரர், சென்னை-53
ஸ்ரீ வசனபூஷணம் வேங்கட நரஸிம்ஹாசாரியர், பசூலிபட்டணம்
P. V. நாராயணஸ்வாமி (ஜோதிபுரம்) கோயம்புத்தூர்
துரைசாமி (திருக்கச்சிநம்பி) Madras-17
S. அப்புஸ்வாமி, பெரியநாய்க்கன் பாளையம்
அனந்த க்ருஷ்ண ஐயங்கார், கரிய மாணிக்கம்
A. ராமஸ்வாமி, சென்னை-2
ராமசாமி, கடலூர்
ராதாக்ருஷ்ணன், ஸ்ரீரங்கம்
R. சௌரிராஜன், தஞ்சாவூர்

சுந்தரராஜன், சென்னை-5.
K. K. திருமலாசாரியர், அலஹாபாத்
E. வைகுண்டமையங்கார், New Delhi
ராமாநுஜம், எடுத்தனூர்
விஜயராகவாசாரியர், அகரம்,
சந்தானம், ஹூப்ளி
G சுந்தர், ராஞ்சி
ரங்கநாதன், பாண்டிச்சேரி
P. K. க்ருஷ்ணராமாநுஜம், கீழ்பாவூர்
வேலாயுத நாடார், கீழ்பாவூர்
Dr. வேணுகோபாலன், சென்னை
உப்பிலி, காஞ்சிபுரம்
M. வேணுகோபால் நாயுடு, ஷெனாய்நகர்
R. வர்தரார்ஜன், ஈரோடு
செல்லப்பெருமாள் கோனார், மதுரை
T. R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், திரளி
M. A. அழகியசிங்கராசாரியர், சென்னை 40
K. P. ஆராவமுதாசாரியர், பழையகோட்டை
K. R. ராமையா, கும்பகோணம்
C. சின்னிக்ருஷ்ண நாயுடு, பாண்டிச்சேரி
வெங்கடேஸ்வர்லு நாயுடு, do
G. N. க்ருஷ்ணன் ஹைதராபாத்

ஸ்ரீ ராமாநுஜன்—322



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 27 | ராக்ஷஸஷு சித்திரைமீ 10—5—75 | ஸஞ்சிகை 10

# நான்கண்ட பெரியார்களின் பெருமையின் தொடர்ச்சி

பத்ராதிபர்

சென்றவிதழில் பல பெரியார்களின் யெருமையை ப்ரஸ்தாவித்திருக்றே னென்பதையும், அதன் சேஷம் மிகமிகவுள்ள தென்பதையும் நினைவூட்டி அதன் தொடர்ச்சியைத் தொடங்குகிறேன். மிக்க அசக்தியில் கிடக்கிற அடியேனுக்கு ஞாபகசக்தியும் குறைந்துவருகின்றது. ஆனாலும் சிரமப்பட்டே ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறேன். பெரும்பாலும் பரமபதித்த மஹான்களைப்பற்றி யெழுதுவதாக உபக்ரமத்தில் தெரிவித்தேன். ப்ராஸங்கிகமாக ஜீவித்திரும்பவர்களைப்பற்றியும் எழுத நேர்ந்துவிட்டது. அப்படி நேர்ந்ததில் முக்கியஸ்தர்களான சில வித்வான்கள் விடுபட்டுப்போனதைப் பிறகு உணரந்தேன், மனம் நொந்தேன். பரமபதித்தவர்கள் ஜீவித்திருப்பவர்கள் என்கிற வாசியற அநாயாஸமாக நினைவுக்குவரும் மஹான்களையெல்லாரையும்பற்றியே யெழுதிப் புனிதனாகிறேன். இதற்கு இரண்டு பயன்; ஆத்மானந்தம் முதற் பயன், மஹான்களைத் தெரிந்துகொள்ளுதல் உலகுக்காகின்றமை இரண்டாவது பயன்.

சென்ற விதழில் ஸ்ரீபெரும்பூதூர் வித்வான்களின் ப்ரஸ்தாவத்தில் வைகுண்டவாஸியான ஸ்ரீமதுரை வே. வேதவாத்தியார். கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியைப்பற்றி விசேஷமாக ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அந்த ஸ்வாமியின் சிஷ்ய ப்ரசிஷ்ய வர்க்கங்களில் வர்த்தமானர்கள் நால்வரைப்பற்றி மனங்குளிர எழுதுகிறேன்.

(1) ஸ்ரீ உ. வே. காங்தூர். நாட்டு சேஷாத்ரி ஐயங்கார் என்பவர் முதல்வர். இவர் இந்த கலாசாலையில் வித்யார்த்தியாயும் உபாத்யாயராயுமிருந்து பிறகு பல

வருஷகாலம் ப்ரின்ஸிபாலாகவுமருந்து இப்போது விச்ராந்தராயிருக்கிறார். இவருடைய வைதுஷ்யம் ஒருபுறமிருக்க க்ஷாந்தி சாந்திகள் தனிப்பட்டவை. (2) ஸ்ரீ உ. வே. திருமலை அரங்கதாண்பிள்ளை. சதாபிஷேகம், கோவிந்தநரஸிம்ஹாசாரியர் இப்போது திருவரங்கம்பெரியகோயிலில் வாழ்பவர்—ப்ரபல வாக்மியாய் ஆங்காங்கு இதிஹாஸபுராண திவ்யப்ரபந்தாதிகளை மிக இனிமையாக உபந்யஸித்துவருபவர். ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையிலேயே வியாகரண மதிகரித்துத் தேறினவர். (3) ஸ்ரீமதுபயவே. ஆஸூரி (பொன்னி) திருவேங்கடாசாரியர் இக்கலாசாலையிலேயே ஸாஹித்ய வியாகரணங்களதிகரித்துச் சிலபல வருடங்கள் சென்னையில காகுமானி கலாசாலையில் ம்ரவக்தாவாக இருந்து இப்போது இரண்டு வருடமாக இக்கலாசாலையையே நிர்வஹித்து வருகிறார் ஸ்ரீமதுபயவே பிள்ளைலோகம். பாஷ்யகாராசாரியர் இக்கலாசாலையிலேயே ஸாஹித்ய நியாயங்களை யதிகரித்து வாக்மியாய் விளங்கி வருகிறார். இனி பழைய வித்வான்களைப்பற்றிப் பேசுகிறேன்.

— ஸ்ரீ பெரும்பூதூரிலிருந்து இன்று கிடைத்த கடிதமொன்று —

## ஸ்ரீ உ வே. வ்யாகரண ஸாஹித்ய சிரோமணி N. சேஷாத்ரி அய்யங்கார் ஸ்வாமி

இந்தஸ்வாமி இளம்பிராயத்திலேயே ஸ்ரீபெரும்பூதூர் உபயவேதாந்த வர்த்தினீ ஸம்ஸ்க்ருத கலாசாலையில் வித்யாப்யாஸம் செய்யத்தொடங்கி ஸ்ரீ. உ. வே. வேதவாத்யார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியிடம் முறைப்படி வ்யாகரண சாஸ்த்ராத்யயநம் செய்தார். அக்காலத்திலே ப்ரஹ்மசாரிகளுக்கும் கீழ்வகுப்பு வித்யார்த்திகளுக்கும் சிந்தனைகள் செய்வித்துவந்தார். பிறகு ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி அயோத்யாராமானுஜ ஜீயர்ஸ்வாமியிடம் திருமந்த்ரார்த்தம முதலான ரஹஸ்யக்ரந்தங்களை அதிகரித்தார். பிறகு கலாசாலை அதயக்ஷராய் எழுந்தருளியிருந்த வித்வத் ஸார்வபௌமரான ஸ்ரீமதுபயவே. ஆஸூரி (பெரிய) ராமானுஜாசார்யஸ்வாமி ஸன்னிதியில் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகள் ஸேவித்து வ்யாகரண ஸாஹித்ய சிரோமணி பரீக்ஷைகளில் முதல்வராக உத்தீர்ணராகி இக்கலாசாலையில் வ்யாகரண ஸாஹித்யபாட ப்ரவசனம் செய்துவந்தார் இந்த ஸ்வாமியின் பாடப்ரவசனத்தில் பரமதிருப்தியடைந்த பாடசாலை அதிகாரிகள் இந்தஸ்வாமியை 1942ம் வருஷம் வைஸ் ப்ரின்ஸிபாலாக நியமித்தனர் பிறகு ஸ்ரீமதுபயவே ஆஸூரிஸ்வாமி விச்ராந்தராக, அந்த ஸ்வாமிக்கு க்ருபாபாத்ர பூதராயிருந்தபடியால் அந்தஸ்வாமி நியமனப்படி 1945ம் வருஷம் ப்ரின்சிபாலாக நியமிக்கப்பட்டார். அதுமுதல் சுமார் இருபது வருஷகாலம இந்த ஸ்வாமி கலாசாலையை நன்கு நிர்வஹித்து வந்தார். இந்தஸ்வாமியிடம் வ்யாகரண சாஸ்த்ரத்தைப் பூர்த்தியாக அதிகரித்த தத்காலம இங்கலாசாலையின் உபாத்யாயராக விருக்கிறா உ. வே பொன்னி ஆஸூரி திருவேங்கடாசார்யர் முதலான சுமார் முப்பத்தைந்து வித்யார்த்திகள் வ்யாகரண சிரோமணி பரீக்ஷையில் தேர்வுபெற்று ஆங்காங்கு கலாசாலைகளில் பாடப்ரவசனம் செய்துவருகின்றனர். (இதேபோல் ஆங்காங்கு ப்ரதிஷ்டிதர்களான விதவான்களைப்பற்றி எழுதியனுப்பினால் ஔசித்யப்படி ப்ரசுரிப்போம்.)

இனி மற்றவித்வான்களைப்பற்றி

## ஸ்ரீமதுபயவே. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி.

இப்பேராசிரியரின் திருநாமம் கேள்விப்படாத ஸ்ரீவைஷ்ணவர் ஒருவரும் இருக்கமாட்டார். இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி ஐம்பது ஸம்வத்ஸரங்களானாலும், இற்றைக்கும் விதவத் கோஷ்டிகளில் இவருடைய திருநாமம் பெரும்பாலும் ப்ரஸக்தமாகியே வருகின்றது. இந்த ஸ்வாமி நியாய வியாகரண வேதாந்தங்களில் சிறந்த பாண்டித்யம் ஸம்பாதித்திருந்ததோடு, பகவத் விஷயத்திலும் ரஹஸ்யப்ரஸ்தானத்திலும் தமிழ் இலக்கியங்களிலும் நிகரற்ற புலமை பெற்றிருந்தார். சென்னைமாநகரில் பத்தெட்டு வருஷங்கள் எழுந்தருளியிருந்து அமுதப்பெருக்கான உபந்யாஸங்களை வெகு ஆச்சரியமாக ஸாதித்துக்கொண்டிருந்தார். "திருக்கண்ணபுரம் ஸ்வாமி ஸாதித்த விசேஷார்த்தம்" என்று. நாளைக்கும் பல ரஸிகர்கள் அதிசயமாகச் சொல்லிக்கொண்டிருப்பர்கள். எந்தவிஷயத்தையும் இனிமையேவடிவெடுத்ததாக உபந்யஸிக்கும் ஆற்றல் இந்த ஸ்வாமிக்கு அஸாதாரணமாக அமைந்திருந்தது. நாலாயிர திவ்யப்பிரபந்த வியாக்கியானங்கள் முழுவதும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்தபடியால் இவருடைய பேச்சுக்கள் பெருவிலை பெற்று விளங்கின. திருவுருவத் தோற்றமோ வெதுகம்பீரமானது. திருமிடற்றோசையோ குழலையும யாழையும் வென்று விளங்குமது. சாஸ்த்ரஜ்ஞானத்தோடு கூடிய ஸம்ப்ரதாயஜ்ஞானம் விசேஷித்திருந்தபடியால் புகழ் மிக்கது.

அடியேனுடைய மாதாமஹரான ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜஷஷ்டி ஜீயர் ஸ்வாமி தம்முடைய பிரவசனங்களில் *வாய்மோட்டு வரதாசாரியர் ஸ்வாமி* யென்று அடிக்கடி ப்ரஸ்தாவித்து அவருடைய உபயவேதாந்த ப்ரவசன பாடவத்தைக் கொண்டாடி ஸாதிப்பதுண்டு. அவர் பட்டப்பாஸ்வாமியின் ஸாக்ஷாத் பிதாமஹர். அவரோடு ஜீயர்ஸ்வாமிக்கு மிக நெருங்கிய பழக்கமிருந்ததாம். அவர் நமது பூர்வாசார்ய க்ரந்தங்களில் மிக ஆழ்ந்த ஞானமுடையவராம். திருக்கண்ணபுரத்திற்கு அணித்தான வாய்மோடு என்கிற அக்ரஹாரத்தில் அந்த ஸ்வாமி ஜனித்தவராதலால் அவரையும் அவரைச் சேர்ந்தவர்களையும் வாய்மோட்டார் என்று வழங்குவர்களாம்.

## காஞ்சி ஸ்ரீமத் தண்றி பட்டப்பா தாதாசார்ய ஸ்வாமி

ஸ்ரீகாஞ்சீ ஸந்நிதிவீதியில் பதினாறுகால் மண்டபத்திற்கெதிர்த்திருமாளிகையில். தண்ட்ரி. ஸ்ரீநிவாஸதாதாசார்ய ஸ்வாமியென்று திருநாமமுடையராய் பட்டப்பாஸ்வாமி யென்றே வழங்கப்பட்டு வந்தவர் இந்த மஹா புருஷர். இவர் அடியேனுடைய திருத்தகப்பனார்க்கு ஸஹாத்யாயியாய் *பஹி: ப்ராண இவாபர:* என்னும்படியிருந்தவரென்று திருத்தகப்பனாரே ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அடியேனுடைய பதினைந்து பிராயத்திற்குள்ளாகவே இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்துவிட்டார். அப்போது இவர்க்கு நாற்பத்தைந்து திருநக்ஷத்ரங்கூட நிரம்பவில்லையென்று ஞாபகம். அடியேன் பாடசாலைக்குப்போகிறபோதும் திரும்புகிறபோதும் இந்த ஸ்வாமியிடத்தில் சற்றுப்போதாவது வார்த்தையாடாமலிருப்பதில்லை. இது

திருத்தகப்பனருடைய நியமனத்தினலுமாயிற்று. ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் வித்யார்த்திகளில் இவர் தலைவராயிருந்து, சதுச்சாஸ்த்ரங்களிலும் துல்யமான பாண்டித்யம் பெற்றிருந்தார். ... ... ... *

## ஸ்ரீமதுபயவே. இளங்காடு ரங்காசாரியர் ஸ்வாமி.

காஞ்சியில் திருப்புட்குழி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயெழுந்தருளியிருந்த மஹாஸ்வாமியின் திருக்குமாரரான ஸ்ரீமத் பட்டண்ணஸ்வாமியின் அந்தேவாஸியான இந்த இளங்காட்டுஸ்வாமி பரமபதித்து இருபது வருஷமாகிறது. இவர் நியாய சாஸ்த்ரத்தில் மஹா நிபுணராய் அதிகரணஸாராவளியையும் தத்வமுக்தா கலாபத்தையும் கண்டஸ்தமாகக் கொண்டிருந்தார். ஸ்ரீமதுபயவே. காதிஸ்வாமி வடநாட்டு ஸஞ்சாரமாக எழுந்தருளுங்காலங்களில் அடியேன் இந்த ஸ்வாமியிடத்திலே நியாயபாடம் வாசித்தவன். "சமதமகுணஸிந்துஸ் ஸாத்விகேஷ்வக்ரகண்ய:" என்பதற்கு மிகப் பொருத்தமானவர் இந்த ஸ்வாமி. நெடுங்காலம் காஞ்சியில் வாழ்ந்து கலாவைஷம்யச் சண்டை, மடமுனித்ரயச் சண்டை முதலான எந்த விவாதத்திலும் த்ரிகரணத்தாலும் ஸம்பந்தப்படாமல் ஸர்வபூதஸுஹ்ருத்தாக விளங்கின பெருமை இந்த ஸ்வாமிக்கு அஸாதாரணமானது. தேவப்பெருமாளுடைய திருவீதிப் புறப்பாடுகளில் நியமேந அந்வயிப்பார் வேதபாராயணகோஷ்டிக்குப் பின்னல் ஏகாந்தசீலராக எழுந்தருள்வர். தம்முடைய நியதமான காரியங்கள் தவிர வேறொன்றில் கண்செலுத்தாபலும் செவிசொடாபலுமிருந்த இந்த ஸ்வாமியின் இயல்பை அநுகரிக்கவல்லாராருமில்லை. ... ...

## ஸ்ரீமதுபயவே நாவல்பாக்கம் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி.

சிஷ்டாக்ரேஸரரும் வித்வத்வரேண்யருமான இந்த மஹாஸ்வாமி மைஸூரில் சாஸ்த்ராப்யாஸங்கள் செய்து ராஜமன்னார் ஸன்னிதி முதலான விடங்களில் சில வாண்டுகள் வாழ்ந்து அறுபது திருநக்ஷத்ரங்களுக்குமேல் காஞ்சி வாஸத்தையே ஸ்திரமாகக்கொண்டிருந்தவர். இடையில் காஞ்சியில் தீர்த்தகஷ்டம் நேர்ந்தபோது இரண்டொரு ஸம்வத்ஸரம் பழைய சீவரத்தில் பாலாற்றங்கரையில் வாஸமாக வெழுந்தருளியிருந்தார். திருமேனி திடமாக இருந்தவரையில் உஞ்சவ்ருத்தியையே ஜீவிகையாக அவலம்பித்திருந்தார். வேதாத்யயனஸம்பத்துங் கொண்டிருந்தார். இந்த ஸ்வாமியிடம் சாஸ்த்ரங்கள் வாசித்து வித்வான்களானவர்கள் பலர். அன்னவர்களில் இப்போது நாவல்பாக்கத்தில் ஏகாந்தசீலராக வாழ்பவரான ஸ்ரீமதுபயவே "அய்யா. தேவநாதாசாரியர் ஸ்வாமி" தலைமைபெற்றவர். நரஸிம்ஹாசார்யஸ்வாமி திருநாடலங்கரித்து பதினைந்துஸம்வத்ஸரமாகிறது. காஞ்சியில் சிலவாண்டுகள் ஸ்ரீரங்கராஜவீதியிலெழுந்தருளியிருந்தவிவர் தென்னண்டைமாடவீதியில் ஒரு திருமாளிகையை ஸ்வகீயமாக அமைத்துக்கொண்டு அதிலேயே பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார். அப்போது ஒருநாள் அடியேனையழைத்து, ஏகாந்தவாஸத்திலும் ஆற்றங்கரையோர வாஸத்திலும் ருசியுடைய நான் இந்த வீதிக்குவந்த காரணம் தெரியுமோ?, என்றார் 'ஸாதிக்கவேணும்' என்றேன். "தினப்படி ப்ரபாதத்தில் நீங்கள்நடத்திவரும் வேதபாராயண கோஷ்டியை ஸாக்ஷாத்தாக அநுபவிப்பதற்கென்றே இவ்வீதி வந்திருக்கிறேன்" என்று ஸாதித்தார். திருமாளிகை வாசலிலே ஏது கோஷ்டி வருவதற்குச்

சற்று முன்னடியே யெழுந்து படிக்கட்டில் நின்றுகொண்டு ஸஹாநுஸந்தானமும் செய்து போருவர். இதை யெழுதும்போது "தே ஹி நோ திவஸா கதா:" என்று தளர்கின்றேன். ... ... ... ... *

## ஸ்ரீமதுபயவே. திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணுசார்ய ஸ்வாமி.

கோஷ்டீபுரம் ஸ்வாமியென்றே ப்ரஸித்தி பெற்றிருந்தவர் இந்த ஸ்வாமி. ந்யாயசாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த ஞானமுடைய வித்வத்வரேண்யராக விளங்கினர். ஸ்ரீமதுபயவே. ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஸந்நிதியில் ஸாமாந்ய சாஸ்த்ரமதி+ரித்து அந்த ஸ்வாமியும் மெச்சும்படியாகத் தேர்ச்சி பெற்றவர். தமது திருத்தகப்பனரான ஸுந்தரகோபாலசாரியர் ஸ்வாமிஸந்நிதியில் அத்யாத்ம சாஸ்த்ரங்கள் பயின்று நம்பெருமாள் ஸந்நிதியிலும் பெருமாள் கோயிலிலும் மதுராந்தகத்திலும் பலநாள் வஸித்து உபயவேதாந்தங்களும் ப்ரவசனம் செய்தவர். இதிஹாஸபுராண ப்ரவசனத்திலும் வல்லவர். இந்த ஸ்வாமியினிடத்தில் அடியேன் விசேஷித்துக் கண்ட குணம் பரமப்ராமாணிகத்வம். நிக்ரஹஸ்தானங்களுக்கு இடமற வ்யவஹரிப்பர். ஈட்டுப்ரவசனத்தில் அந்தரங்கமான விச்வாஸமுள்ளவர்.

## ஸ்ரீமதுபயவே. கபிஸ்தலம் தேசிகாசார்யஸ்வாமி.

இந்த ஸ்வாமி மிகவும் ப்ரக்க்யாதராய் மஹாமஹோபாத்யாய பட்டமும் பெற்ற ப்ரபல வித்வான். வேதாந்த சாஸ்த்ரத்தில் உபகாரகங்களான சில க்ரந்தங்களும் இயற்றினவர். த்வைதிகளோடும் அத்வைதிகளோடும் வாதம் செய்து புகழ் பெற்றவர். திருப்பதியிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசாரியர்ஸ்வாமி, அவருடைய திருத்தமையனரான பங்காராசாரியர்ஸ்வாமி ஆகிய இவர் ஸந்நிதியிலும் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் வாசித்துப் பல மதங்களிலும் பல பேர்களை வித்வான்களாக்கினவர். அடியேனுடைய பந்துக்கள் திருப்பதியில் அதிகமாகவுள்ளபடியால் இளமையில் பலகால் அவ்விடம் விடைகொள்ள நேரும். அந்த ஸமயங்களிலெல்லாம் ஸ்வாமியோடு நெருங்கிப் பழகவும் நேரும். 1930ல் வேதலக்ஷண விவாதம் பிரபலமாக நடந்துகொண்டிருந்தபோது அடியேன் திருப்பதிக்கு விடைகொண்டிருக்கையில் ஸ்வாமி தாமாகவே அழைத்து இந்த விவாதஸ்வரூபமென்னவென்று விசாரித்தறிந்து திருவுள்ளமுவந்து அபிநந்தன பத்ரிகையும் ஸாதித்தது ஜகத்ப்ரஸித்தம். அதன்பிறகே அந்த விவாதம் சாந்தமாயிற்று. இது நெடுநாளாய்விட்டபடியால் உலகுக்கு மறந்துபோயிருக்குமென்றெண்ணிய அக்நிஹோத்ரி ஸமீப காலத்தில் அநாமதேயக் காகிதங்களை வெளியிடுவித்தார். ... ... ... *

## ஸ்ரீமதுபயவே. காளி ரங்காசார்யர் ஸ்வாமி.

மாயவரம் தாலுக்காவில் காளியென்பது ஒரு அக்ரஹாரம். அவ்விடத்தில் உதித்துத் தேரழுந்தூரில் வாழ்ந்து கொண்டிருந்த இந்த ஸ்வாமி புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் நெடுங்காலம் தானாதிகாரி பதவியை அலங்கரித்திருந்தார். பிறகு

விச்ராந்தராய்த்தம் நுதிருக்குமாரரோடுகூட வஸிக்கவேண்டி கரச்பூரிலும் கல்கத்தாவிலு மெழுந்தருளியிருந்து கடைசியாக புது டில்லியில் இருக்கும்போது திருநாடலங்கரிக்க நேர்ந்துவிட்டது. இந்த ஸ்வாமியின் பரிசயம் எமக்கு விசேஷமாக இருந்தது. இவர்க்கு மதத்ரய நிருபகரென்று ஒரு ப்ரஸித்தியுண்டு. அந்த ப்ரஸித்திக்கு ஏற்பச் சில க்ரந்தங்களுமியற்றிப் பிரசுரம் செய்திருக்கிறார். ஒருவருடைய தாக்ஷிண்யத்திற்கும் கட்டுப்படாமலும் ஸங்கோசபிதியில்லாமலும் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை வஞ்சியாமலும் தமது திருவுள்ளத்தில் பட்டதை வெளியிடும் பான்மை இந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் வெகு நாள் அநுபவித்த மஹா குணம். அடியேனுடைய க்ரந்தங்களைப் பெரும்பாலும் கடாக்ஷித்தருளி அபிநந்தன பத்ரிகைகள் வெளியிட்டவர் இந்த ஸ்வாமி. இவர் ஸந்நிதியில ஸ்வரூபக்ரந்த காலக்ஷேபம் செய்தவர்கள் பலர். அன்னவர்களில் ஒருவரான ஸ்ரீமதுபயவே. **"கோமல் சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி"** ராமாயணபூஷணாதி பிருதாலங்க்ருதராய் சில ஸம்வத்ஸரங்களாக சென்னை மாநகரில் ப்ரவசநதுரந்தரராய் விளங்கி வருவது ஸுப்ரஸித்தம்.

இவர் அடிக்கடி காஞ்சிக்கு எழுந்தருள்வர். அடியேனோடு ஸம்பாஷிக்க வேணுமென்றே பலகால் எழுந்தருளி நாலுநாள் எட்டுநாள் பத்துநாள் கூட அடியேனுடைய க்ருஹத்திலேயே யெழுந்தருளியிருந்ததுண்டு. அக்காலத்தில் வேதலக்ஷண விஷயமாக அடியேனெழுதி வெளியிட்ட வேதார்த்தயந ஸர்வஸ்வாதி க்ரந்தங்களை ஓரக்ஷரம் விடாமல் ஆழ்ந்து ஆராய்ந்து அபிநந்தித்த இந்த ஸ்வாமியின் அபிநந்தன பத்ரிகைகள் பல வெளிவந்திருக்கின்றன.

ஸ்ரீமத் உபயவே. விரக்தி பாஷ்யகாசார்ய மஹாஸ்வாமி.

இந்த ஸ்வாமி திருப்புட்குழி ஸமீபத்திலுள்ள முஸரபாக்கத்தில் யெழுந்தருளியிருந்தார். இவர் வியாகரண மீமாம்ஸைகளில் பரிபூர்ணபாண்டித்யம் பெற்றிருந்ததோடு உபயவேதாந்தங்களிலும் அகாதமான ஞானமுடையவர். அவரை 'நீறுபூத்த நெருப்பு' என்றே யாவரும் சொல்லுவர்கள். காஞ்சீபுரத்தில் ஸ்ரீயதோக்தகாரிஸந்நிதி ப்ராந்தத்திலுள்ள பல பெரியார்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் காலக்ஷேபம் செய்யவேணுமென்று ஆவல்கொண்டு இந்த மஹா ஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப்பண்ணி அவ்விடத்திலேயே ஸ்திரவாஸியாக வைத்து யதோக்தகாரி ஸந்நிதியில் பொய்கையாழ்வார் திருமண்டபத்தில் நித்யமும் இருவேளைகளில் ஸம்ப்ரதாய க்ரந்தப்ரவசநம் நடந்துவரும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். அப்படி 15,20 வருஷகாலம் நடந்தது. அக்காலத்தில் பிரபல உத்யோகஸ்தர்கள் வக்கீல்கள் வைதிகர்கள் பலரும் அந்தஸ்வாமி பக்கலிலே உபயவேதாந்த ரஹஸ்யங்களையெல்லாம் வரியடைவே ச்ரவணம் செய்துவந்தார்கள். அதுவொரு நல்லடிக்காலமென்னவேணும். இந்த ஸ்வாமிக்கு ஸ்ரீவசநபூஷண மீமாம்ஸா பாஷ்யம், ரஹஸ்யத்ரய மீமாம்ஸா பாஷ்யம், பாலஸரஸ்வதீ ப்ரணீத தாத்பர்ய தீபிகை, ஸம்ப்ரதாயசந்த்ரிகை......இத்யாதிகளான அர்வாசீந உத்துங்க க்ரந்தங்களிலும் விசேஷமான உபஸ்திதியுண்டு. அந்த க்ரந்தங்கள் யாவும் அந்த ஸ்வாமிக்குத் தவிர வேறு எந்த வித்வானுக்கும் வசப்பட்டிருக்கவில்லை யென்று திண்ணமாகச் சொல்லலாம். அந்த க்ரந்தங்களையெல்லாம் அந்த ஸ்வாமி ஸந்நிதியிலே வாசிக்கவேணுமென்று அடியேனுக்கு அபிலாஷை யுண்டாயிற்று. முன்னம் ப்ரஸ்

துதரான ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியிலே ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை யதிகரித்து வித்வானுயிருந்த தாமல் குட்டி ஸ்வாமியும் அப்போது காஞ்சியில் வாஸமாக வந்திருந்தபடியால் இருவருமாகச் சேர்ந்து அதிகரித்து வந்தோம்.

## விசாகபட்டணம் பரவஸ்து பட்டநாதஸ்வாமி

விசாகபட்டணத்தில் பரவஸ்து குடும்பத்தார் இற்றைக்குமுளர். மஹாமஹோபாத்யாய. பரவஸ்து. ரங்காசார்ய ஸ்வாமி யென்பவர் மிகப்ரஸித்தர். அவரை அடியேன் ஸேவித்ததில்லை, அவருடைய திருவுருவப்படம் ஸம்பாதித்து வெளியிட்டிருக்கிறேன். இவருடைய பரம்பரையை வித்வத் பரம்பரை யென்று வழங்குவர்கள். இவர்கள் பகவத் ராமாநுஜ தர்சனஸ்தர்களாயிருந்தும் 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம:' என்று எழுதார்கள்; ''நம: பரமர்ஷிப்ய:' என்றே எழுதுவர்களாம். மேலே ப்ரஸ்தாவித்த ரங்காசார்ய ஸ்வாமியின் பௌத்ரர்களில் ஒருவர் பட்டநாதஸ்வாமி யென்பவர் கும்பகோணம் காலேஜில் பேராசிரியராயிருந்தவர். மற்றொருவர் திருப்பதி காலேஜில் பலவாண்டுகள் வாழ்ந்து விச்ராந்தரானவர். அவருடைய பரிசயம் அடியேனுக்கு மிகக் குறைவு. பட்டநாதஸ்வாமி யென்பவர் சிறந்த சாஸ்த்ரஜ்ஞர், மஹாமேதாவி அடியேன் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடத்திக்கொண்டிருந்த காலத்தில் கும்பகோணத்தில் வாழ்ந்துவந்த அவர் பத்ரிகா மூலமாகவே மிகவும் பரிசிதராயிருந்தார்.

சென்ற பரீதாவி ஸம்வத்ஸரத்தில் (1912ல்) அஸ்மதாசார்யவர்ய ஸ்ரீ ஜகத்குரு, காதிஸ்வாமியோடு கூட அடியேன் ஜகந்நாதபுரீ ரதயாத்ரோத்ஸவத்திற்கு விடைகொண்டிருந்து திரும்புகையில் ஸ்ரீஸ்வாமி 'விசாகபட்டணத்தில் ஒருவேளை தங்கிப் போவோம்' என்று ஸாதித்து அப்படியே அங்கு எழுந்தருளினபோது இந்த பட்டநாதஸ்வாமி யென்பவர் அங்கிருந்தார். பத்ரிகா ஸம்வாதங்களுக்குப் பிறகு அப்போதுதான் ப்ரதமஸந்தர்சனம். ''ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளில் அடியேனுக்கு ப்ராவண்ய முண்டாக்கினதற்கு மிகவும் க்ருதஜ்ஞனாயிருக்கிறேன்'' என்று ஸ்ரீஸ்வாமி திருமுன்பே அடியேனைக் குறித்துச் சொன்னார். பிறகு சில மாதங்களில் அந்த பட்டநாதஸ்வாமி அகால மரணமடைந்துவிட்டார். அவருடைய பாண்டித்யமும் லேகனநைபுண்யமும் அபிநந்தநீயமாயிருந்தது.

## ஸ்ரீமதுபயவே. சிறுபுலியூர் தொட்டயாசார்ய ஸ்வாமி. *

ஸ்ரீ வில்லிபுத்தூரில் மஹாவைபவசாலியாகவும் ப்ரக்க்யாதராகவு மெழுந்தருளியிருந்த சிறுபுலியூர் ஸ்வாமியை ஸ்ரீ வைஷ்ணவவுலகமெல்லாமறியும். சிறந்த சிஷ்யஸம்பத்துவாய்ந்தவர். ''ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையனான குரு'' என்ற பாசுரத்திற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளி இருந்தவர். அந்த மஹாஸ்வாமிக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்த திருக்குமாரர் மஹா பண்டிதோத்தமராய் திருத்தகப்பனாரோடு கூடவே வாழ்ந்தவர். இளைய திருக்குமாரர் தொட்டயாசாரியரென்பவர் காஞ்சியில் விவாஹ ஸம்பந்தம் பெற்றவர். பெரும்பாலும் ஸ்ரீபெரும்பூதூரில் வஸித்துவந்தவர். பண்டிதோத்தமராக விளங்கிவந்தார். இவர் பாணன் பவபூதி முதலான கவிகளைப்போன்று கவிதையில் நிகரற்றவராய்

விளங்கினர். கத்யபத்யங்கள் அத்யாச்சர்யமாக எழுதுவர். அவரைப் போன்ற எழுத்தாளர் அவரே யென்னலாம். அவர் "விசக்ஷண" என்றொரு ஸம்ஸ்க்ருத பத்ரிகை நடத்த ஆரம்பித்துச் சில மாதங்களே நடத்தினர். அப்போது அவருடைய நட்பு அடியேனுக்கு அதிகமாக விளைந்தது. அவர் இன்னமும் ஜீவித்திருக்க வேண்டியவர்.

இவருடைய திருத்தமையனரைச் சென்று ஸேவிக்கவேணுமென்று பாரித்திருந்தவடியேன் ஒரு மார்கழியில் புறப்பட்டு நம்பெருமாள் ஸன்னிதியிலும் ஆழ்வார் திருநகரியிலும் ஸேவித்துவிட்டு, நாச்சியார் திருமாளிகைக்கு விடை கொண்டேன். அப்போது ஸ்ரீ வில்லிபுத்தூர் ரைல்மார்க்கம் கிடையாதாகலால் சாத்தூரில் இறங்கி வண்டிமார்க்கமாய் மாலை 4 மணிக்கு ஸ்ரீ வில்லிபுத்தூருள் நுழைகிறேன். சிறுபுலியூர் ஸ்வாமி திருமாளிகைக்கே விடைகொள்ளவேண்டி அவ்விடம் செல்லுகையில் ஸ்வாமி திருமாளிகை வாசலில் ஸ்ரீ வைஷ்ணவப்ருந்தம் ஸ்ரீ சூர்ண பரிபாலனம் நடத்துகிற ஸந்தர்ப்பம். சிறுபுலியூர் மஹாஸ்வாமி பழுத்த பழமாயிருப்பவர் ப்ராசீநாவீதியாய் நிற்கிறர். வண்டியைவிட்டிறங்கி என்ன விசேஷமென்று விசாரிக்கிறேன்; 'பெரிய திருக்குமாரர் பரமபதித்துவிட்டார்; ஸ்வாமியே சரம கைங்கர்யம் நடத்தவேண்டியதாயிற்று நடக்கிறது' என்றார்கள். என்ன சொல்லுவேன்! ஆகாசத்தை நோக்கி அழுவன் தொழுவனே. திருமுக்குளம் சென்று ஸ்ரீ பாததீர்த்தம் சேர்த்துக்கொண்டு நள்ளிரவில் பெரியஸ்வாமியை ப்ரப்ரதமமாக ஸேவித்துவிட்டுப் பாவியேன் என்று நின்றேன். ஸ்வாமியோ *புஷ்கரடலாசே ஆப இவ என்னும்படி ஸேவை ஸாதிக்கிறர். அடியேனுடைய வாழ்க்கையில் அடிக்கடி நினைத்துப் பரிதபிக்கும் விஷயமிது. தொட்டயாசார்யருடைய திருப்பேரன்மார்கள் இப்போது யசஸ்விகளாய் விளங்குகிறார்கள்.

## ஸ்ரீமதுபயவே. யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி

பலகாலம் திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி வித்வானயிருந்ததோடுகூட பி பல தனிகராயுமிருந்தார். அதனால் இந்தஸ்வாமி செய்தருளின லோகோபகாரங்கள் அளவுகடந்தவை. உபயவேதாந்த க்ரந்தங்கள் பலவற்றை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானம் இரண்டு அரும்பதவுரைகளோடும் ஸ்ரீவசனபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தோடும் [ஆயிரம் பக்கங்களுக்குமேல் கொண்ட மிகப்பெரிய ஸ்ரீ கோசம்] இம்மஹான் தெலுங்கு லிபியில் அச்சிட்டு வெளியிட்டது ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் நிர்வசனதிகளோடுங்கூட மிகப்பெரிய ஸ்ரீகோசமாகத் தெலுங்கு லிபியிலேயே அச்சிட்டார். மற்றும் பலபலவுண்டு காஞ்சிபுரத்தில் வித்வத்ஸிம்ஹமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத். குன்றபாக்கம் ஸ்வாமி இந்த மஹானோடு அதிகமாகப் பழகினவர். அந்த ஸ்வாமி இவருடைய மேதையையும் ப்ரதிபையையும் பலகால் ப்ரசம்ஸித்து ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். நானும் நேரில் அநுபவித்திருக்கிறேன். இந்த ஸ்வாமிக்கு சக்ரவர்த்தி திருமகன் கனவிலே ஸேவைஸாதித்துத் திருவயோத்தியில் ஸன்னிதி ப்ரதிஷ்டை செய்யும்படி நியமிக்க, அந்த நியமனத்தை சிரஸா வஹித்து அயோத்யையில் கோலகாட் என்று ப்ரஸித்தமான ஸரயூதீரத்தில் தாக்ஷிணாத்ய ப்ரக்ரியையிலே திவ்யஸன்னிதி நிர்மாணம் செய்வித்து ப்ரதிஷ்டை பண்ணியிருப்பது ப்ரஸித்தமான விஷயம். இந்த

ஸன்னிதியை அம்மாஜீ மந்திர் என்றே வடநாட்டினர் வழங்குவர். இந்த ஸ்வாமியின் தேவியாரான சிங்கம்மாவின் திருநாமமே அம்மாஜீயென்பது. இந்த அம்மா தம்முடைய வாழ்நாளைப் பெரும்பாலும் இந்த ஸன்னிதியிலேயே கழித்தார். பகவத் விஷயத்திலும் ரஹஸ்யவியாக்கியானங்களிலும் இந்த அம்மாவுக்கிருந்த ப்ரஜ்ஞை அமோகமானது. ஒருநாள் தவறுமல் ப்ரவசனம் செய்துகொண்டிருந்ததை நேரில் பலகால் அநுபவித்திருக்கிறேன். ஸ்ரீமத் பரமஹம்ஸ. அயோத்யா. ராமாநுஜஜீயர் ஸ்வாமி [கோயில் ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஆஸ்தானத்தில் சிலவாண்டுகள் எழுந்தருளியிருந்து விலகினவர்] க்ருஹஸ்தாச்ரமத்தில் ப்ரவேசியாமல் ப்ரஹ்மசர்யாச்ரமத்திலேயே யிருந்தவர் அயோத்யை ஸன்னிதியில் சிலவாண்டுகள் கைங்கர்யபரராயிருந்துகொண்டு சிங்கம்மாவிடத்திலேயே ஸ்வரூபக்ரந்தங்களெல்லாம் அதிகரித்தவர். ஸ்ரீபெரும்பூதூரில் எம்பார் ஜீயர்ஸ்வாமியாக எழுந்தருளியிருந்த சிறுகுன்றம் ஜீயர் ஸ்வாமியும் அப்படியே. இவ்விரு ஸ்வாமிகளும் இந்த அம்மாவின் தனியலை ஸேவித்தே காலக்ஷேபங்கள் செய்தருளினதாகப் பலகால் ஸாதிக்கக் கேட்டிருந்தேன். உத்தராதி வைஷ்ணவர்கள் பலர்க்குங்கூட ஸ்வரூபக்ரந்தங்களை ப்ரவசனம் செய்துகொண்டு வாழ்ந்த மஹாநுபாவை இந்த விலக்ஷண தம்பதிகளின் சிந்தனையைப் பரம புனிதமாக நினைத்துச் செய்தேனின்று. ... ...

— ஸ்ரீமது பயவே. தேவசிகாமணி ராமாநுஜாசார்ய ஸ்வாமி. —

மண்டயம் தேவசிகாமணி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த வித்வான் பரமபதித்து முப்பது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது. இவர் மைஸூரில் வாசித்து விசேஷத: மீமாம்ஸா சாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் அத்விதிய வித்வன் மணியாக விளங்கினவர். அயோத்யையிலும் ப்ருந்தாவனத்திலும் பல ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்து சாஸ்த்ர ப்ரவசனம் செய்தவர். மிகச்சிறந்த க்ராந்திகர். அடையாறில் அச்சாகி வெளிவந்த அஹிர்ப்புத்நியஸம்ஹிதை வெகு ஆச்சரியமான பதிப்பு. அதற்கு இந்த ராமாநுஜாசார்ய ஸ்வாமியே பரிஷ்காரகராயிருந்தவர். அந்த ஸம்ஹிதைக்கு இந்த ஸ்வாமியெழுதி வெளியிட்டுள்ள மிக விரிவான பூமிகையை வாசித்துப் பார்ப்பவர்களுக்கு இவருடைய வித்யா பரிச்ரமம் அத்விதியமென்பது புலப்படும். இவருடைய லேகனங்களும் பாஷணங்களும் மிகச் சிறந்தவை. (தொடரும்)



---

## — உபந்யாஸகர்கள் அடிக்கடி சிந்தனை செய்யவேண்டிய விஷயங்கள் —

### "அடிபோனுள்ளானுடனுள்ளான்"

பகவத் விஷயம் (ஈடு) ஸ்ரீ வசநபூஷண வியாக்கியானம், குருபரம்பராப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே காண்பதோரிதிஹாஸத்தைச் சுருக்கமாகக் கேண்மின், எம்பெருமானார் உபயவேதாந்தப்ரவசநம் நடத்தியருளா நிற்க "ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிருபகமாகச் சொல்லப்படாநின்றதே, இவற்றினுள் அந்தரங்கநிருபகம் ஏது?" என்கிற ப்ரஸ்தாவம் திருவோலக்

கத்திலே நிகழ, ஸ்வாமி ஸர்வஜ்ஞராயெழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்யமுகேந வெளியிடுவிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே சென்று ஸேவித்து இதனையறிந்து வரும்படி கூரத்தாழ்வானை யனுப்பியருள, ஆழ்வானும் திருக்கோட்டியூர்க்குச்சென்று நம்பிபக்கலிலே ஆறுமாஸம் காத்திருந்து "அடியேனுள்ளானுடலுள்ளான்" (8-8-2.) என்கிறதிருவாய்மொழிப் பாசுரத் துணுக்கைப் பெற்றுக்கொண்டு எம்பெருமானாரிடம் வந்து சேர்ந்து அதை விஜ்ஞாபிக்க, மஹாநிதியான இந்த ஸ்ரீ ஸூக்தியினுட் பொருளை ஸ்வாமி திருவோலக்கத்திலே விவரித்தருளினார்.

அடியேனென்கிற சொல் நாலாயிர திவ்யப்ரபந்தத்திலுள் நூற்றுக்கணக்கான விடங்களிலுண்டு; நம்மாழ்வார் பாசுரம்பேசத் தொடங்கும்போதே 'அடியேன் செய்யும் விண்ணப்பமே, என்று அடியேன் சொல்லையிட்டே பேசுகிறார். இப்படிப் பல நூறிடங்களில் அடியேன்சொல் இருக்கவும் அவற்றையெல்லாம் விட்டுத் திருவாய்மொழியில் ஒருமூலையிலிருக்கும் பாசுரத் துணுக்கொன்றைத் திருக்கோட்டியூர் நம்பி எடுத்துக் கொடுத்தனுப்பியிருக்கிறார்; அது எட்டாம்பத்தின் எட்டாம் பதிகத்தின் இரண்டாம் பாட்டிலுள்ளது. ஆங்கேயே முதற்பாட்டின் முடிவிலும் 'ஒருவனடியேனுள்ளானே' என்று அடியேன் சொல்லுள்ளது; அதையும் விட்டு அடுத்த பாட்டினடியை யெடுத்துக்காட்டியுள்ளார். இதில் என்ன விசேஷமென்பது நுண்ணுணர்வினர்தம் நுண்மதிக்கே கோசரமாகக் கூடிய விஷயம். கேண்மின்; எந்த இடத்திலும் அடியேனென்கிற சொல்லுக்கு தேஹவிசிஷ்டனான ஆத்மாவே பொருளாகும். "அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்னுமிடத்தை யெடுத்துக்கொள்வோம்; தேஹமின்றிக்கே வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்ய முடியாதன்றோ; தேஹவிசிஷ்டனான ஆத்மாவே விண்ணப்பஞ்செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை; "அடியேன் சிறியஞானத்தன்" என்கிற மற்றோரிடத்தையும் (1-5-7.) எடுத்துக்கொள்வோம்; இங்கு 'ஞானத்தன்' என்று ஞானமுடைமை சொல்லியிருப்பதனால் அது தேஹத்திற்கு அஸம்பாவிதமாய் ஆத்மாவுக்கே ஸம்பாவிதமாகையாலே இங்கு அடியேனென்பது வெறும் ஆத்மாவையே சொல்லியாகவேண்டுமென்று சிலர் ப்ரமிக்கக்கூடும்; அப்படியில்லை; இங்கும் அடியேனென்கிற சொல் தேஹவிசிஷ்டனான ஆத்மாவையே சொல்லுகிறது; ஏனென்னில், "காண்பான் அவாவுவன்" என்கிறக்ரியையிலே அச்சொல் அந்வயிக்க வேண்டும்; வெறும் ஆத்மா அலற்றமுடியாதாகையாலே அங்கும் தேஹவிசிஷ்டனான ஆத்மாவே அடியேன்சொல்லுக்கு அர்த்தமாகவேண்டியது அவசியமாயிற்று. இப்படி எந்தவிடத்திலும் தேஹவிசிஷ்டனான ஆத்மாவையே அடியேன் பதம் சொல்லி நிற்குமென்பது திண்ணமாயிற்று. "ஒண் சங்குகதை வாளாழியானொருவனடியேனுள்ளானே" என்கிறவிடத்திலும் அப்படியே.

இனி "அடியேனுள்ளானுடலுள்ளான்" என்கிறவிடத்தில்மட்டும் அடியேனென்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. ஆத்மாவுக்கு விசேஷணபூதமான தேஹத்திற்கு வாசகமான சொல் உடலென்பது தனிப்பட இருப்பதனால் அடியேனில் தேஹத்தைச்சேர்த்து அர்த்தஞ்சொல்லவேண்டிய அவசி

யமில்லை; எம்பெருமான் ஜீவாத்மாவையும் உடல்பொருளையும் அநுப்ரவேசித்திருக்குமவன், என்று சொல்லவேண்டுவது இங்கு விவக்ஷிதம். உடலிலுள்ளானென்பதனால் ஜடப்பொருளை அநுப்ரவேசித்திருக்குமவன் என்பது சொல்லிற்றாயிற்று. 'ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று விவக்ஷிதமான பொருளுக்கு 'அடியேனுள்ளானென்று வாசகமிடப்பட்டிருக்கிறது. ஆத்மா அஹமர்த்தமாகையாலே என்னுள்ளானென்று சொல்லியிருக்கலாம்; அப்போதும் ஆத்மாவிலுள்ளானென்னும் பொருள் தேறிவிடும். ஆனால் ஆழ்வார் அப்படி யருளிச்செய்யாமல் 'அடியேனுள்ளானென்றருளிச் செய்திருக்கையாலே, ஆத்மாவென்றும் அடியேனென்றும் பர்யாயம்—(அதாவது) ஆத்மாவுக்கு சேஷத்வமே அந்தரங்க நிருபகம்-என்பது ஆழ்வார் திருவுள்ளமாக அறுதியிடலாகிறது.

இப்படி எம்பெருமானார் நிர்ணயித்ததாகச் சொல்லுமைதிஹ்யம் உண்மையாயிருக்கவேண்டுமாகில் இது அந்த ஸ்ரீ பாஷ்யகார திவ்யஸூக்திகளில் எங்கேயாவது ஏறியிருக்கவேணும்; இல்லையாகில் இந்த ஐதிஹ்யத்திற்குக் கௌரவமில்லை. ஸ்ரீபாஷ்யத்தில் "ஜ்ஞோத ஏவ" என்கிற ஸூத்ரத்தின் விவரணத்தில் இது தெரிவிக்கப்படவில்லை. அங்கு "அயமாத்மா ஜ்ஞாத்ருஸ்வரூப ஏவ" என்று இவ்வளவே முடிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மேலே விவரித்த ஐதிஹ்யம் யதார்த்தமாயிருக்கத் தகுதியில்லையென்று குருகுலவாஸ பாக்யமில்லாதார் சிலர் சொல்லுவதுண்டு. அன்னவர்களை "எண்ணாத மானிடத்தை எண்ணாதபோதெல்லாமினியவாறே" என்கிறரீதியில் விட்டிட்டு தத்வஜிஜ்ஞாஸுக்களான ஸுக்ருதிகளுக்கு மட்டும் மருமமுணர்த்துகிறேனிங்கு. இந்தமஹார்த்தம் எம்பெருமானார் திருவுள்ளத்திலே நன்கு ஊறியிருந்து கீதாபாஷ்யத்தில் தகுந்த இடத்தில் வெளியிடப்பெற்றது. கீதையில் (7-16) "சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந,| ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப!" என்றவிடத்தில் சங்கரபாஷ்யத்தை முன்னம் நோக்கிப் பிறகு ஸ்வாமி பாஷ்யத்தை நோக்குமின். "ஜ்ஞாநீ-விஷ்ணோஸ் தத்த்வவித்" என்றார் சங்கராசார்யர்; நம் ஸ்வாமி அப்பொருளை ஒன்றாக எண்ணாது "பகவச் சேஷதைகரஸ ஆத்ம ஸ்வரூபவித்-ஜ்ஞாநீ" என்று அருளிச்செய்துளர். இப்படி ஒரிடமன்று. ஜ்ஞாநீ என வருமிடங்களிலெல்லாம் இங்ஙனே யருளிச்செய்கிறார். ஜீவாத்மாவின் ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனம் தன்னுடைய சேஷத்வத்தையறிவதுதான் என்று ஸ்வாமியின் திருவுள்ளம் தேறுகிறது. ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் அவகாஹநமில்லாமல் இங்ஙனே யருளிச்செய்ய இயலாது. ...

## "பஜதாம் ப்ரீதிபூர்வகம் ததாமி."

ஸ்வாமியின் கீதாபாஷ்யத்தை ஆழ்ந்து அநுபவித்தால் அதிலுள்ள ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும திவ்யப்ரபந்தத்தையுட்கொண்டே அருளிச்செய்தவையென நிச்சயிக்கலாம். ப்ரக்ருதம் அவ்விடத்திலிருந்து ஸாரதமமான மற்றோரிடமுமெடுத்துக்காட்டுகிறேன். கீதை (10...10) "தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம்ப்ரீதி பூர்வகம், ததாமி புத்தியோகம் தம்" என்றவிடத்தில் சங்கராசார்யர் 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்று அந்வயக்ரமம் காட்டி "ப்ரீதி:—ஸ்நேஹ: ; தத்பூர்வகம் மாம பஜதாம் இத்யர்த்த:" என்று எழுதியுள்ளார். இந்த அர்த்தத்தில் என்ன குறை

சொல்லமுடியும்? ஆனாலும் ஸ்வாமி "ப்ரீதிபூர்வகம் ததாமி" என்றே அந்வயம் காட்டியருளுகிறார். சேதநன் செய்கிற பஜனத்தில் ப்ரீதிபூர்வகத்வத்தைக் கூட்டாமல் எம்பெருமான் செய்யுமருளிலே அதைக் கூட்டுகிறார் ஸ்வாமி; இதற்கு உண்மையான காரணம் தெரியுமோ? திருவாய்மொழியில் (8-7-8.) *என்னையாளும் பிரானார் வெறிதே யருள்செய்வர்—உகந்து* என்றுள்ளது. எம்பெருமான் தான் விஷயீகரிக்கத் திருவுள்ளமானவிடத்தில் அவ்யாஜமாகச் செய்யுமருளை உகந்து செய்வதாக ஆழ்வார் அருளிச்செய்கிறார்: இப்படி யருளிச்செய்த ஆழ்வார்க்கு நிர்திஷ்டகீதாச் லோகத்தில் "ப்ரீதிபூர்வகம் ததாமி" என்னுமந்வயமே திருவுள்ளத்திலுறைந்திருக்குமென்று ஸ்வாமி நிச்சயித்து அதற்கு அநுருபமான பாஷ்யத்தை இட்டருளினார் இவ்வண்ணமாக கீதாபாஷ்யத்தில் ஆழ்ந்து பார்த்தால் மறைநிதிகள் மலை மலையாகக்கிடைக்கும். அவற்றை நம் உபந்யாஸங்களில் விளக்கி வருகிறோம்.

## நிகரில்புகழாய் நிர்வாஹம்

சரணாகதிகத்யத்தில் *அகிலஹேயேத்யாதி (5) சூர்ணையில் "மஹா விபூதே! ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீவைகுண்டநாத!" என்கிற ஸம்போதநங்களுக்குப் பிறகு "அபார காருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார்ய ஐச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே!". என்கிற ஸம்போதநத்தில் வாத்ஸல்யகுணமும் சேர்த்துப் படிக்கப்பட்டிருக்கச் செய்தேயும் மறுபடியும் (அவ்விடத்தில்) *ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே!* என்று மற்றொரு ஸம்போதநமும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது, கீழுள்ள ஸம்போதநத்திலேயே வாத்ஸல்யகுணமும் சேர்ந்திருக்கவும் மீண்டும் வாத்ஸல்யத்தை மாத்திரமிட்டுத் தனியேயொரு ஸம்போதந மருளிச்செய்திருப்பது எதற்காகவென்று விமர்சிக்கவேணும். கீழ் ஸம்போதநத்தில் வாத்ஸல்யத்தை மற்றும் பல திருக்குணங்களோடே சேர்த்துப் படித்ததில் த்ருப்தி யில்லாமல் வாத்ஸல்யத்தை மாத்திரம் தனிப்பட எடுத்துரைக்கவேணுமென்று திருவுள்ளமுண்டாகி இங்ஙனே யருளிச்செய்திருப்பதாக ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது. பெருவிடாயப்பட்டவன் நீரிலே விழுந்து நீரைப் பல முகமாக உபயோகங்கொள்ளுமாபோலே பகவத் குணகண கீர்த்தனத்திலே அத்விதீயமான உத்கண்டையையுடைய எம்பெருமானார் அலமாப்பின் மிகுதியாலே யருளிச்செய்யுமதுக்கு நாம் ஒரு அடைவு தேடவேண்டாமாகிலும், இந்த புநருக்தி வாத்ஸல்ய குணத்திலேயானபடியாலே நம் ஆசார்யர்கள் அவ்விடத்தில் விசேஷாவதானம் செலுத்தி வெளியிட்டிருக்குமது இங்குத் தெரிவிக்கலாகிறது. வெகு நுட்பமான விஷயமிது.

திருவாய்மொழியில் (6-10-10.) *அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கை யுறை மார்பா!* என்று ஆழ்வார் பெரிய பிராட்டியாரை முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணுகிறபோது அடுத்த இரண்டாமடியில் எம்பெருமானை *நிகரில் புகழாய்!* என்று ஸம்போதித்திருக்கிறார். ஒப்பற்றவொரு திருக்குணத்தை யுடையவனே யென்றபடி. அந்த திருக்குணம் எதுவாக இருக்குமென்று ஆராய்ந்தால் ப்ரகரணத்தை யநுஸரித்து வாத்ஸல்யமே அது — என்று எம்பெருமானார் திருவுள்ளம் பற்றுகிறார். தோஷபூயிஷ்டனை சேதநன் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகவரிப்பது எதற்காகவென்னில்; தன்னுடைய

தோஷங்களைக் கண்டு எம்பெருமான் தன்னை நிக்ரஹித்தருளாமைக்காகவன்றோ அப்பிராட்டியினுடைய புருஷகாலபலத்தாலே எம்பெருமானிடத்தில் முதன்முதலாக எந்த திருக்குணம் விகாஸமடைகின்றதெனனில்; வாத்ஸல்யகுணமே என்பது நிர்விவாதம்.

வாத்ஸல்யமாவது தோஷாதர்சித்வமா ? தோஷபோக்யத்வமா ? என்கிற விசாரம் இவ்விடத்தில் சிறிதும் கொள்ளப்படவில்லை. எதுவாயினுமாகுக. தோஷாதர்சநமே வாத்ஸல்யமென்று கொள்வோம். அக்குணம் எம்பெருமானுக்கு உள்ளதேயாகிலும் சேதநனுடைய அபராத பாஹுள்யத்தாலே அது உள்ளே அமுங்கிக் கிடந்ததென்றும், பிராட்டியின் புருஷகார பலத்தாலே அது தலையெடுக்கிறதென்றும் ஆசார்யர்கள் கண்டறிந்து கூறுகிறார்கள். இதை நிகமாந்தகுருவும ரஹஸ்யத்ரயஸாரத்தில் த்வயாதிகாரத்திலும் மற்றும் சிறு ரஹஸ்யங்களிலும் ஸுஸ்பஷ்டமாக வெளியிட்டுள்ளார். °நிகரில்புகழாய். என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் விவக்ஷிதமான குணம் வாத்ஸல்யமே யென்பது பிள்ளைலோகாசார்யருடைய ரஹஸ்யங்களோடு தேசிக ரஹஸ்யங்களோடு வாசியற எல்லாவற்றிலும் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆக, இந்த வாத்ஸல்யகுணத்தை ஆழ்வார் நிகரற்றதாகத் திருவுள்ளம்பற்றினபடியாலே. ஸ்வாமி ராமானுஜர் இதை மற்ற திருக்குணங்களோடு சேர்த்துப்படித்த வளவால் த்ருப்தி பெருமல் தனிப்படவும் ஒரு சூர்ணிகை இதற்காக இட்டருளினர். இதனால் ஆழ்வாரருளிச் செயலில் எம்பெருமானர் வைத்திருந்த கௌரவாதிசயம் விசதமாகும் ... ... ... *

## யத்பதாம்போருஹத் தனியன் விசேஷம்

ஆளவந்தார்க்குத் தனியனாக *யத்பதாம்போருஹத்யாதி. ச்லோகம் ராமானுஜன் அருளிச்செய்தது ஸுப்ரசித்தம். இது கீதாபாஷ்யத்திலேயே சேர்ந்ததாதலால் ஸ்வாமி ஸ்ரீஸூக்தியென்பதில் விவாத லேசமுமில்லை இந்தச்லோகம் அமைந்திருக்குமழகை ஆராய்ந்தால் ஸ்வாமியின் உக்திஸரணி லோகவிலக்ஷணமானதென்பதை அல்ப ப்ரஜ்ஞர்களும் அறுதியிடக்கூடும். அந்த ச்லோகத்திற்குப் பெரியார்கள் பரம்பரையாக உபதேசித்துவரும் அர்த்த விசேஷங்களை ஆஸ்திகர்களுக்கு உபகரிக்கிறோம் யத்பதாம்போருஹத்யாநவித்வஸ்தாசேஷகல்மஷ:, வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமிதம் இது ஆளவந்தாருடைய இரண்டுதிருவடிகளை மாத்திரம் சிந்திப்பதாகச்சொல்வதன்று; *யத்பதாம்போருஹ பதத்தினுல் பதினன்கு திருவடிகள் உத்தேசிக்கப்படுகின்றன (யத்பதாம்போருஹ) என்கிற ஆறு எழுத்துக்களுக்கு வர்ணக்கிரமம் சொன்னால் பதினன்கெழுத்துக்கள் தேறும். ஹகார அகார=என்றுயிற்று வர்ணக்ரமம சொல்லும் வழி. இவ்வலகையில் தேறுகிற பதினன்கெழுத்துக்களும் பதினன்கு திருவடிகளைத் தெரிவிக்கும். அவை எவையெனில், ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் தெரிந்தேயிருக்கின்றன. அவ்வாளவந்தார் தமக்குப் பரம நிதியாகக் கொண்ட [*ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா என்ற] நம்மாழ்வாருடைய இரண்டு திருவடிகள்; ஆக நான்கு. அவ்வாளவந்தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்து ஸ்வாமிக்கு ஆசார்யர்களான பஞ்சாசார்யர்களின் திருவடிகள் பத்து. ஆக

இப்பதினான்கு திருவடிகளைச் சிந்தித்து ஸத்தை பெற்றதாகத் தெரிவிப்பது இந்த ச்லோகம். இதனை விவரித்துக் காட்டுகேன் காண்மின்.

**யஸ்ய** பதாம்போருஹே—யத்பதாம்போருஹே: என்று ஸமாஸம். (ஸம்பந்த ஸாமாந்யே ஷஷ்டீ என்று அறிக) ஆளவந்தாருடைய திருமேனியிலுள்ள பாதாரவிந்தங்களைச் சொன்னபடி. மறுபடியும் 'யஸ்ய பதாம்போருஹே, என்றால்—ஆளவந்தார் தாம் *மாதா பிதா யுவதய:' என்கிற ச்லோகத்தில் "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா* என்று தம்முடைய சென்னிக்கு அணியாகப் பரிக்ரஹித்த நம்மாழ்வாருடைய உபயபாதங்களும் யத பதாம்போருஹ சப்தத்தினாலேயே எளிதாகத் தெரிவிக்கப்படும். இப்போது ஷஷ்டிக்கு அர்த்தம்—பரிக்ராஹ்ய பரிக்ராஹக பாவரூபமான ஸம்பந்தம். மீண்டும், "யஸ்ய பதாம்போருஹாணி யத்பதாம்போருஹாணி" என்று கொள்க. உலகில் சிஷ்யர்களைத் திருவடிகளென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் வழங்கு வராதலால் ஆளவந்தாருடைய ஐந்து சிஷ்யர்களையே ஆளவந்தாருடைய திருவடிகளாகச் சொன்னபடி. 'பதாம்போருஹ' என்பதில் இரண்டு பதங்கள் உள்ளனவன்றோ; (பத என்றும் அம்போருஹ என்றும்) திருவடிக்கு வாசகமான பத சப்தத்தினால் அவருடைய சிஷ்யர்களைச் சொல்லி, தாமரைக்கு வாசகமான அம்போருஹ சப்தத்தினால் அவர்களுடைய திருவடிகளைச் சொல்லுகிறதென்றும் கொள்ளலாம். அம்போருஹமென்றால் திருவடிகளைச் சொல்லும்மாவென்னில்; *தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே *மண்விண்முழுது மளந்த வொண்டாமரை* என்கிற ஆழ்வார் பிரயோகங்களையறிந்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணமாட்டார்கள். "தாவி வையங்கொண்ட தடந்தாளிணை' என்ன வேண்டுமிடத்தில் திருவடிக்குப் பர்யாயமாகத் தாமரையையே சொல்லியிருப்பது காண்க. இந்த நடை வடமொழியிலுமுண்டு; அபஹ்நுத்யலங்காரமென்பர்கள். ரூபகாதிசயோக்தியுமாகும். "பத்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச்சரா:" இத்யாதிகள் காண்க.

ஆக, பரமாசார்யரான நம்மாழ்வாரையும் ப்ராசார்யரான ஆளவந்தாரையும் ஸ்வாசார்யர்களான ஐவரையும் ப்ரகாசப்படுத்தியே தனியனிட்டிருக்குமழகு ஸஹ்ருதய ஹ்ருதயங்கமம். "குரும் ப்ரகாசயேத் சிஷ்ய:" என்னுமல் "ப்ரகாசயேத் தீமாந்,, என்று மூலப்ரமாணத்தில் இருக்கையாலே மஹா மேதாவிகள் எவ்விதமாக ஆசார்ய ப்ரகாசநம் பண்ணலாமோ அவ்விதமாகவே ஸ்வாமி தாமும் தம்முடைய மேதா வைபவம் விளங்க இங்ஙனே ச்லோகரத்நம் தொடுத்திருப்பது மிகவற்புதம். மஹான்களுடைய திருநாவின் விறு இங்ஙனேயன்றோ இருப்பது, இப்படி நுட்பமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்படியான அதுக்கு ச்லோகமியற்ற வேணும்? எல்லாரும் ஸுஸ்பஷ்டமாகவே நன்கு தெரிந்துகொள்ளும்படியியற்றலாகாதோ வென்று கேட்பவர்கள் யாவஜ்ஜீவம் அப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம்.

*யத்பதாம்போருஹேத்யாதியான மேற்குறித்த தனியனில் மற்றொரு விசேஷமும் நுட்பமாக உய்த்துணரத் தக்கதுண்டு: அதாவது—[பதாம்போருஹ] என்று ஐந்து எழுத்துக்களையிட்டு ஆளவந்தார் திருவடிகளை நிர்தேசித்திருப்பதானது ஆளவந்தாருடைய ஐந்து திருவடிகள் [அதாவது, ஐந்து சிஷ்யர்கள்] தம்முடைய சிந்தனைக்கு இலக்கானவர்களென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அது தன்னிலும் முதலிலே

பகாரத்தையிட்டிருப்பதானது அந்த ஐந்து ஆசார்யர்களுள் தலைமையாசிரியரே தமக்குத் தலைவரான ஆசார்யராக வாய்த்தார் என்பதற்கு ஸூசகமாகிறது. எங்ஙனேயென்னில்; ஸ்வாமிக்குத் தலைமையாசிரியர் பெரியநம்பி அவருடைய நிஜநாமதேயம் பராங்குசதாஸர் என்பது வாக்ய குருபரம்பரையில் "ஸ்ரீமதே ராமாநுஜாய நம:, ஸ்ரீமத்யாமுந முநயே நம:"; என்ற வாக்கியங்களுக்கிடையில்" ஸ்ரீபராங்குச தாஸாய நம:" என்றிருப்பது கொண்டும் பெரிய நம்பியினுடைய திருநாமம் பராங்குசதாஸரென்பதே யென்றறியலாம் யத்பதாம்போருஹ என்றதில்முதலிலுள்ள பகாரம் பராங்குச தாஸராகிற தம் முதலாசிரியரை ப்ரத்யபிஜ்ஞாபநம் பண்ணவல்லது என்றுணர்க. இதற்குமேல் ஒன்று கேட்கக்கூடும்; முதலெழுத்தினால் பெரியநம்பி ஸூசிதராகிறாப்போலே, மற்றை நான்கெழுத்துக்களினாலும் மற்ற நான்கு ஆசாரியர்கள் ஸூசிதர்களாகிறபடியையும் காட்ட வேண்டாவோ? என்று. கேண்மின்; தலைவரான ஆசிரியரைக் காட்டுமளவே போதுமானது. ஒவ்வோராசிரியரையும் இங்ஙனே காட்டியாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. மஹா விவேகிகளான சதுரர்கள் இன்னமும் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த வழியும் புலப்படும்.

ஆக இந்த உபாதந ப்ரக்ரியையினால் எம்பெருமானார் அரியபெரிய விசேஷங்களை நுட்பமாகவே அருளிச்செய்யுமியல்பினர் என்பதை விவேகிகள் நிர்ணயிக்கக் குறையில்லை. திருமாலையாண்டான் திருவடிகளிலே ஸ்வாமி திருவாய்மொழிப் பொருள் கேளா நிற்கையில்' த்ரோணாசார்யர்க்கு ஏகலவ்யன் போலே ஆளவந்தார்க்கு நான்' என்றருளிச் செய்ததாக சரித்திர நூல்களிலே ப்ரஸித்தமாகவுள்ளது. இதை வேதாந்தவாசிரியர் அப்படியே ஸமஸ்க்ருதப்படுத்தி "த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹமித்யபிப்ராயேண" என்று' யத்பதாம்போருஹ ச்லோக வியாக்கியானத்தில் அருளிச் செய்கிறார். ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமே வடிவெடுத்தவரான ஆளவந்தாருடைய திருவடிகளைச் சிந்தித்துத் தாப் ஸத்தை பெற்றதாகச் சொல்லிக் கொள்ளுமெம்பெருமானார் ஆழ்வார் திருவடிகளிலும் அவருடைய திவ்ய ஸூக்திகளிலும் ஆளவந்தாரைவிட அதிசயிதமான ப்ராவண்யமுடையவரே யென்பது சிலாலிகிதம். ... ... ...

## எம்பெருமானார் ஸ்ரீஸூக்திப் பெருமை மற்றொன்று

ஸ்வாமியெம்பெருமானார் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யும்போது ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளை இடைவீடின்றித் திருவுள்ளத்தில் சிந்தனை செய்துகொண்டேயிருந்தாரென்று முன்னோர்கள் மொழிந்திருப்பதுண்டு. அது உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த அறிவுபெற்ற மஹான்களுக்கே அறியவெளிது இதற்குச் சான்றாக எடுத்துக் காட்டக்கூடிய விடங்கள் பலவுண்டு. ப்ரக்ருதம் அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் உள்ளதான அரிய பெரிய விஷயமொன்று இங்கு நிரூபிக்கப்படுகிறது. அவ்விடத்தில் பரமபுருஷனுக்கு சரீர ஸம்பந்தம் கிடையாதென்று பூர்வபக்ஷவாதத்தில் ப்ரஸக்தமானதை ஸ்வாமி கண்டிக்குமிடத்து ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் சரீர பரிக்ரஹம் பகவான் செய்தருளுகிறபடியை நிருபித்துவருகையில் 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்' என்கிற கீதா ஸூக்தியையெடுத்துக்காட்டி, 'ஸாதுபரித்ராணமேவ உத்தேச்யம்: ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ரு

நாம்விநாச:, ஸங்கல்பமாத்ரேணாபி ததபபத்தே:”என்றுள்ளது ஸ்ரீபாஷ்யஸூக்தி. எம்பெருமான் அவதாரம் செய்தருள்வது ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவுமானாலும் ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதொன்றே உத்தேச்யம்: துஷ்டர்களைத் தொலைப்பதென்பது ஸங்கல்ப மாத்திரத்தினாலும் ஆகக்கூடியதாதலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதானமன்று — என்பது மேலெடுத்துக்காட்டிய ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின் கருத்து. துஷ்டர்களைத் தொலைப்பது ஸங்கல்ப ஸாத்யமாகிருப்பதுபோலே ஸாதுபரித்ராணமும ஸங்கல்பஸாத்யமாகக் கூடாதோ? “துஷ்டர்கள் நஷ்டர்களாகக் கடவர்கள்” என்று ஸங்கல்பிப்பதுபோல. “ஸாதுக்கள் ஸம்ரக்ஷணம் பெறக்கடவர்கள்” என்றும் பகவான் ஸங்கல்பிக்கமுடியு மன்றோ. அப்படியிருக்க, துஷ்டசிக்ஷணமே ஸங்கல்பத்தால் ஸாத்யமென்றும் சிஷ்டபரிபாலனம் ஸங்கல்ப ஸாத்யமன்று என்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் எதுகொண்டு ஸாதிக்கிறாரென்று ஆராயுமளவில், நம்மாழ்வாருடைய ஸுஸ்பஷ்டமான ஸ்ரீஸூக்தியைக் கொண்டே ஸாதிக்கிறாரென்று நன்கு விளங்குகிறது. அதை விவரிக்கிறேன்.

திருவாய்மொழியில் (3—1—9) *மழுங்காத வைநுதிய சக்கரநல்வலத்தையாய், தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில். தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச் சோதி மறையாதே* என்கிற பாசுரம் பரமபோக்யமானது. எம்பெருமான் ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய கூக்குரலைக் கேட்டு அரைகுலைய த் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடிவந்து விழுந்தானென்கிற இதிஹாஸம் ப்ரஸித்தமானது; எதற்காக வோடிவரவேண்டும்? *கருதுமிடம் பொருதுவரவல்ல திருவாழியாழ்வானைத் திருநாட்டிலிருந்தே ஏவினால் அவன் ஒரு நொடியில் யானையின் இடரைத் தீர்த்துவர மாட்டானோ? அவனுக்குததான் ச்ரமம் கொடுக்க வேண்டுமோ? ஸகல ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் கருவியாயுள்ள ஸங்கல்பத்தினால் யானையின் இடரை அவலீலையாகத் தீர்த்திருக்கலாமே. இவ்விரண்டுபடியுமின்றிக்கே அறப் பதறியோடிவந்தது எதற்காக? என்று நம்மாழ்வார் கேள்வி கேட்டுக்கொண்டு ஸமாதானத்தையும் தாமே யருளிச்செய்துள்ளார். *தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே* என்கிற இரண்டாமடிதான் ஸமாதானம. கஜேந்திராழ்வான் தன்னெதிரே வந்து நின்ற பகவானைநோக்கி, *நாஹம் கலேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ* என்றான். [என்றேனு மொருநாள் அழிந்தேபோகக்கூடியதான இவ்வுடலுக்காக நான் கரையவில்லை; எம்பெருமானே! உன்னை ஸேவித்து உன் பொற்றாமரையடிகளில் இத்தாமரை மலர்களைப் பணிமாறுவதற்காகவே கரைந்தேன் என்றான்.] இப்படிப்பட்ட ஆவல் கொண்ட பக்த சிகாமணிகளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்ட முடியாதென்பதையும் அப்பாசுரத்தின் பின்னடிகளில் ஆழ்வார் தாமே விவரித்துக் கூறியுள்ளார். நேரில் அவதரித்துத் திருமேனியைக் காட்டியே அன்பர்களைக் காக்க வேண்டும்—என்று ஆழ்வாருளிச்செய்த அர்த்தத்தையே ஸ்வாமி உயிராகக் கொண்டு அந்தரதிகரண ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியைப் பணித்தாராயிற்று. ...

குறிப்பு:—பத்ராதிபருடைய நேத்ரபாடவக்குறைவினால் விளைந்துள்ள அச்சுப் பிழைகள் சிலவேயாம்.

# துயிலெழுப்பும் துக்கட்டாக் கதைகள்

உபந்யாஸங்கள் ஹரிகதைகள் கேட்பவர்களுக்குப் பெரும்பாலும் இடையிடையில் தூக்கம் வந்துவிடும். அவர்களை துயிலெழுப்புவதற்கு அப்போதப்போது ஒரு துக்கட்டாக்கதை சொல்லுவர்கள்.

(1) ஒரு டம்பாச்சாரி சொக்காய் தலைப்பாகையணிந்து கொண்டு பெரிய ஹோட்டலில் நுழைந்தான்; அவனை மிகப் பெரிய மனிதனாக நினைத்து, தின்பண்டங்களை விசேஷமாக அளிக்கச் செய்தார் போஜனசாலைக்காரர். டம்பாச்சாரி மூக்குவரை உண்டுவிட்டு எழுந்து கைவீசிக்கொண்டு கடுநடையிட்டுச் செல்லுகிறான். தின்றதற்குக் காசு ஒன்றும் கொடாமலே போகவே, உணவுக்கடைக்காரர் தொடர்ந்து சென்று 'காசுகொடுக்கவில்லையே கொடுங்கள்' என்ன, டம்பாச்சாரி உடனே அவன் கன்னத்தில் பளீர் என்று அறைந்து ,எத்தனை தடவை காசு கொடுப்பது?' என்றான். உண்மையில் ஒருகாசும் கொடாமலே இப்படி கன்னத்தில் அறைந்தான். அறைந்த அறை இலேசானதன்று; 'காசு கொடாமலிருந்தால் இந்த அடிகொடுப்பனோ?'' என்று சொல்லிக்கொண்டே கன்னத்தைத் தடவிக்கொண்டே திரும்பிச்சென்றுவிட்டார் தின்பண்டக் கடைக்காரர். 'குத்ருஷ்டி குஹநாமுகே நிபதத: பரப்ரஹ்மண:' என்ற யதிராஜஸப்ததி ஸூக்தி விவரணத்தில் இக்கதை பொருத்தமாயிருக்கும். ''ஈச்வரனில்லை, விக்ரஹமில்லை, விபூதியில்லை, குணமில்லை, என்று அவ்வோ புறச்சமயிகள் பண்ணும் கோலாஹலங்களைக்காணும் எம்பெருமான்தானே தனக்கு இவையில்லையென்று துணிந்து தலைகாட்டிடகில்லாமல் தொலைகிறானாம். ...

## மற்றொரு கதையுங் கேளீர்.

மற்றொரு டம்பாச்சாரி தின்பண்டச்சாலையிற்புகுந்து சுமார் பத்து ரூபாய் மதிப்புள்ள பக்ஷணங்களை வாங்கிப் புசித்துவிட்டுக் காசுகொடாமலே கையைவீசிக்கொண்டு புறப்பட்டுவிட்டார். கடையில் பத்தெட்டு வேலைக்காரர்களிருப்பதால் யாரிடமாவது காசு கொடுத்திருப்பானென்று நினைத்த முதலாளி அந்தடம்பாச்சாரிக்கு உபசாரங்கள் செய்து வழிவிட்டுவிட்டுப் பிறகு வேலைக்காரர்களை விசாரித்ததில் ஒருவரிடத்திலும் காசு கொடுபடவில்லையென்றறிந்த முதலாளி சைக்கலில் புறப்பட்டுப் போய் அந்த டம்பாச்சாரியைக் கண்டுபிடித்துக் கையைப்பிடித்துக்கொண்டு ''என்னஸார்! காசு கொடாமலே போகிறீர்களே! என்றான்.

(இருவர்க்கும் நடந்த ஸம்பாஷணை கேளீர்;) (டம்பாச்சாரி) காசு எதற்காக? (கடைக்காரன்) பலஹாரங்கள் சாப்பிட்டீர்களே அதற்காக. (டம்பாச்சாரி) என்ன பலஹாரம் சாப்பிட்டோம். (கடைக்காரன்.) பத்து வடை, பத்து லட்டு, ஏழு ஜாங்கிரி, எட்டு இடியாப்பம் சாப்பிடவில்லையா? (டம்பாச்சாரி) சாப்பிடவில்லையென்று யார் சொன்னது. சாப்பிட்டோம் என்ன அதற்கு? (கடைக்காரன்) காசு கொடுங்களென்கிறேன். (டம்பாச்சாரி) காசு எதற்காக? என்கிறேன். (கடைக்காரன்) பலஹாரம் சாப்பிட்டீர்களே அதற்காகவென்கிறேன். (டம்பாச்சாரி)

என்ன பலஹாரம் சாப்பிட்டேன்? (கடைக்காரன்) வடை, லட்டு, ஜாங்கிரி...... என்று அடுக்குகிறுன். (டம்பாச்சாரி) சாப்பிட்டோமையா சாப்பிட்டோம். இல்லையென்று யார் சொல்ரு? என்ன அதற்கு? (கடைக்காரன்) காசு கொடுக்க வேண்டாமா? காசு கொடுங்கள். (டம்பாச்சாரி) வடை சாப்பிட்டோம். ஜாங்கிரி சாப்பிட்டோம், இடியாப்பம் சாப்பிட்டோம், எல்லாம் சாப்பிட்டோம்; இல்லை யென்கிறேனு? அதற்கு என்ன? (கடைக்காரன்) காசு கொடுங்களென்கிறேன் (டம்பாச்சாரி) காசு எதற்கு என்றுதானே நான் கேட்பது. அதற்கு பதில் இல்லையே ஓயாத இந்த ஸம்பாஷணை இவ்வளவோடு போதும்.

கல்யாண முஹூர்த்தத்திற்கு நாளிட்டுத்தரும்படி ஒரு யதாஜாதன் ஒரு புரோஹிதரிடம் வேண்டிக்கொண்டான்; அவர் ஏதோ ஒரு பஞ்சாங்கத்தைத் உவ ருகப் பார்த்து 'பங்குனிமீ' 14உ நல்லநாள் என்று தெரிவித்தார். அந்த யதா ஜாதன் அப்படியே குறிப்பிட்டு உற்றுருறவினர்க்கு சுப பத்திரிகை அனுப்பிவிட் டான். ஒருவர் கவனித்துப் பார்த்ததில் அந்நாள் க்ருத்திகையும் அமாவாசையும் சனிக்கிழமையும் மரணயோகமுங் கூடியிருந்தது. உடனே ஓடிவந்து 'இதென்ன' இப்படி விபரிதமான நாளை யார் உமக்கு இட்டுக் கொடுத்தது? என்று கேட்க. அவன் உண்மையில் திதிவார நக்ஷத்ர நன்மை தீமைகள் ஒன்றுமறியாதவனுக இருக்கவே புரோகிதரிடம் வந்து தாங்களிட்டுக் கொடுத்த நாள் நல்லதன்று' என்கிறுர்களே யென்றுன். உடனே புரோகிதர் பஞ்சாங்கமெடுத்துப் பார்த்தவாறே முன்பு தாம் பார்த்தது வேறொரு வருஷத்தியதென்றும் அநவதாநாத் தவறிப்போய் விட்ட தென்றும் உண்மை தெரிந்துகொண்டார். ஆனுலும் தமது அசட்டுத்தனத்தை ஒப்புக்கொள்ள மனமில்லாமல் ஒரு சூது செய்யத் தொடங்கினுர். நல்ல நாளன்று என்று உன்னிடம் சொன்னவரை இங்கு அழைத்துவா; நான் எது கேட்டாலும் அவர் ஆமாம் ஆமாம் என்றே ஒப்புக்கொள்ளும்படி செய்து விடுகிறேன் பார்', என்று சொல்லிப் போய்விட்டார். உடனே அவரை யழைத்துக்கொண்டு வந்தா னவன். அவரை நோக்கி புரோஹிதர் கேட்கிறுர். [வினு] பங்குனிமீ 14உ அமா வாஸ்யைதானே? [விடை] ஆமாம். [வினு] அன்று கிருத்திகைதானே? [விடை] ஆமாம். அன்று சனிக்கிழமைதானே? [விடை] ஆமாம் [வினு] அன்று மரண யோகந்தானே? [விடை] ஆமாம் [வினு] நான் கேட்டால் எதையும் ஆமாம் ஆமாம் என்கிறீர்; இவனிடம் போய் (அல்ல அல்ல) என்கிறீராமே, ஏன்? இதற்கு மேல் அவர்க்கு ஒன்றும்பதில்சொல்லத் தோன்றவில்லை நம்மால் இவர்க்கு பதில் சொல்லிப் பிழைக்க முடியாதென்று சிக்கன வெண்ணி ஒன்றும் சொல்லாமல் போய் விட்டார்; இக்கதைகள் ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவன் காஞ்சி வேகவதிக்கரைத் தோட்டத் தில் பகவத்விஷய காலக்ஷேபத்தில் ஸாதிக்கக் கேட்டவை.

---

**காஞ்சிபுரம் ஸ்ரீ வரதராஜர் ப்ரஹ்மோத்ஸவம் 22-5-75உ கொடி யேற்றம். 24உ கருடசேவை. 28உ திருத்தேர். 31உ துவஜ அவரோஹணம்.**

## முன்னுக்குப்பின் முரணான வார்த்தை

ரங்காசாரியரை ராகவாசாரியர் வினவுகின்றார்—உம்முடையமகன் வாசித்து முடித்து உத்யோகம் பார்க்கிறானென்று கேள்விப்பட்டேன்; சந்தோஷம். மாதம் ஐந்நூறுரூபாயாவது சம்பளம் இருக்குமா? (ரங்காசாரியர்) ஐந்நூறுமில்லை; ஏதோ நூறு ரூபா பென்று கொண்டுவருகிறான். நான் உத்யோகம் பண்ணுகிற நாளிலே சம்பளம் ஐம்பது ரூபாதான்; அப்படி ஆயிரம் வாங்குவேன், இப்படி ஐந்நூறு வாங்குவேன். எப்படியும் மாதம் இரண்டாயிரம் லஞ்சத்திலேயே சம்பாதிப்பேன். சம்பளத்தோடு நின்றிருந்தேனாகில் இவ்வளவு பெரிய பங்களா கட்டியிருக்க முடியுமா? இந்த பையன் மக்கு. சம்பளத்தோடு நிற்கிறான். (இது இப்படி யிருக்கட்டும்).

இரண்டொரு மாதத்திற்குப் பிறகு இந்த ரங்காசாரியருடைய பக்கத்து வீட்டுக்காரர் (தாசீல்தாரர்) லஞ்சம் வாங்கினாரென்று தண்டிக்கப்பட்டார். பலர் பரிதபிக்கிறார்கள்; அப்போது இந்த ரங்காசாரியார் சொல்லுகிறார் — "நானும் நாற்பது வருஷகாலம் உத்யோகம் பண்ணினேன். சின்ன உத்யோகத்திலிருந்து பெரிய உத்யோகங்களும் பார்த்தேன்; ஒருபைசாலஞ்சம் வாங்கியிருப்பேனா? ஒரு கீரைத்தண்டாவது ஒருவனிடம் வாங்கியிருப்பேனா? எவ்வளவு கௌரவமாக என் வாழ்நாளைக்கழித்தேன் தெரியுமா?, அன்பர்களே!, இவருடைய முன்வார்த்தையையும் பின்வார்த்தையையும் கவனித்துப்பாருங்கள்.

## அருளிச்செயலில் ஓர் அருமையான அர்த்தம்

திருவாய்மொழியில் (3-9.) *சொன்னால்விரோதப்பதிகத்தில் எம்பெருமானுக்கு ஆழ்வார் இடும் அடைமொழியொன்று* கொள்ளக் குறைவிலன்* என்பது. இதற்கு மிதமதிகள் கூறும் பொருளாவது- எம்பெருமானுடைய ஐச்வரியம் எப்படிப்பட்டதென்றால் பிறர் கொள்ளக் கொள்ளக்குறையாதது. எத்தனைபேர் எவ்வளவு கொண்டாலும் கொள்ளக்கொள்ள மேன்மேலும் மிகமிக வளருமேயன்றி, சிறிதும் குறைபடாது; நம் போல்வாருடைய செல்வம் அப்படிப்பட்டதன்றே; செலவு செய்யச்செய்யக் குறைந்து போமன்றோ- என்றிப்படி அஸங்கதமாகச் சொல்லுவர்கள். இதுவன்றுபொருள். ஆசாரியர்கள் திருவுள்ள பற்றும் பொருள் கேண்மின். கையில்பத்தொடுக்காசு உடையஒருவனை நோக்கி "இவன லக்ஷாதிகாரி" யென்று ஒருவன் சொன்னால் அதை அவன் மெய்யென்று கொண்டு இறுமாந்திருப்பன்; அதைக்கேட்கும் பிறரும் மெய்யென்றிருப்பர். லகுகௌமுதி வாசித்தவொருபேதையைப்பார்த்து இவன் 'மஹாபாஷ்யாந்தபண்டிதன்;என்றால் அவனும் மெய்யென்றிருப்பன், பிறரும் மெய்யென்றிருப்பர்கள். ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *அந்யத்ர அதத்குணோக்தி;* என்று பட்டர் அருளிச்செய்தபடி உலகில் அதத்குணோக்திகளேயன்றோ அளவிறந்து கிடக்கின்றன. அந்த அஸதுக்திகளை உண்மையாக ஏற்றுக்கொள்ள உலகில் ஒருவனுக்கும் ப்ராப்தியில்லை. எம்பெருமான் விஷயத்தில் எவ்வெவ்விதமான ஏற்றங்களை யார்யார் சொன்னாலும் ஒன்றும் பொய்ம் மொழியன்றிக்கே "உள்ளதில் ஏகதேசமன்றோ சொல்லிற்று" என்னும்

படியாயிருக்கும். எனவே, சொல்லக்குறைவிலன் என்பதற்கு- ஏற்றமாகச் சொல்லும் எவ்விதமான துதிமொழிகளையும் ஏற்றுக் கொள்வதற்குத் தகுதியுடையவன் எம்பெருமான்—என்றுபொருளாம். ... ... ... *

## ஸ்ரீமான் உ. வே. விழுப்புரம் வரதேசிகன், அட்வகேட்

இப்பெயர்பூண்ட பெரியார் [சிறுமாமனிசர்] ஏழெட்டுமாதமாகவே சடிக மூலமாக எனக்கு அன்பார்ந்த நண்பராகக் கிடைத்தவர். நேரில் காணப்பெறவேணு மென்கிறஅவா இருவர்க்குமிருந்தது. 4–5-75ல அன்று காலைஸகுடும்பமாக இவண் வந்திருந்து நெடுநேரம்பேசி என்னை ஆனந்தக்கடலில் அமிழ்த்தினர். 'ஆனந்தவமுதக்கடலில்' என்னவேணும்? அவருடைய நற்குண நற்சீலங்களைப்பற்றித்தனியே யெழுதவேண்டும். பிறகு எழுதுவேன். அவர் தமதுகையில் இருசிறுபுத்தகங்கள் வைத்திருந்தார். இவைஎன்ன? என்றுகேட்டேன். கடாக்ஷிக்கலாமே? என்றுகையில் கொடுக்கவெழுந்தார்.

ப்ராஸங்கிகமாக விஜ்ஞாபிக்கிறேன். ஒருவருடத்திற்குமுன்பு நடந்த நேத்ர சிகித்ஸைக்குப்பிறகு [ஆனந்தஞ்பூர்த்தியாக] புத்தகங்கள்வாசிப்பது எழுதுவது ஆகிய இரண்டையும் எளிதாக நடத்திவந்தேன்; அதனால் கண்களுக்குச்சிறிது அபாடவம் ஏற்பட்டது. பிறகு கண்டாக்டரைச் சந்தித்ததில் 'புத்தகங்கள்' தபால்கள் அச்சகப்ரூப்கள் வாசிப்பதை அறவே நிறுத்திக்கொள்ளுங்கள்; எழுதுவதைமட்டும் பரிமிதமாக்வைத்துக் கொள்ளுங்கள், என்றுகட்டளை கிடைத்தது. நான்குமாதங்களாக ஏடுகள்வாசிப்பதை அறவே நிறுத்திக்கொண்டிருக்கிறேன். அது பராதீனமாகவே நடந்துவருகிறது. அதனால் அச்சுத்தாள் திருத்துவதும் பராதீனமாகவே நடந்துவருவதனால் இடையிடையே அச்சுப்பிழைகள் காணப்படுமென்பதையும் இடையேதெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கீழே ப்ரஸ்தாவித்த ஸ்ரீவரதேசிகன் என்னிடம் கொடுக்கவந்த இரண்டு சிறு புத்தகங்களை நான்பெற்றுக் கொள்ளாமல் 'விஷயத்தைச் சுருக்கமாகச் சொல்லவேணும்' என்றேன். அவர் சொன்னதாவது—

"ஆழ்வாராசாரியர்களைப்பற்றி எழுதப்பட்டிருக்கிறது; திருமங்கையாழ்வார்க் குப்பிறகுதான் நம்மாழ்வாருடைய திருவவதாரம்; ஆழ்வார்களனைவர்க்கும் பிற்பட்டவரே நம்மாழ்வார். இவரிடத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் நேராகவே ஆச்ரயித்திருக்கலாம். நம்மாழ்வார் ஓதாதுஉணர்ந்தவரல்லர்; (அதாவது-இக்காலத்துவைணவர்கள் சொல்லுகிறபடி எம்பெருமானருளினாலேயே ஞானம் படைத்தவரல்லர்; பள்ளிக்கூடம் சென்றுபடித்து அறிவுபெற்றவரே)—இத்தியாதிகள் எழுதப்பட்டிருப்பதாகச் சொன்னர்.

அப்போது நான் அவரிடம் உரைத்த சிலவார்த்தைகளைமட்டும் தற்போது இங்கெழுதுகின்றேன். பவபூதி மஹாகவிபணித்த உத்தரராமசரித நாடகத்தில் இராமபிரானுடைய வார்த்தையாக ஒரு சுலோகமுள்ளது, (அதாவது) 'ஹா ஹா', திக் பரக்ருஹவாஸதூஷணம் யத் வைதேஹ்யா: ப்ரசமிதம் அத்புதைருபாயை:, ஏதத் தத் புநரபி தைவதுர்விபாகாத் ஆலர்க்கம் விஷமிவ ஸர்வத: ப்ரஸ்ருப்தம்

என்பதாம். இதன்பொருளாவது—சக்ரவர்த்தி திருமகனுர் ராவணவதாதிகளை முடித்துக்கொண்டு திருவயோத்திக் கெழுந்தருளிப் பட்டாபிஷேகம் கண்டருளி அரசுபுரியாநிற்கையில், தூதுவர்மூலமாக நாட்டுப்பேச்சுக்களைச் செவியுறுகையில் பிராட்டிவிஷயமாக மூலைமுடுக்குகளில் சிலர்பேசும் அவப்பேச்சுக்களைக் கேட்டுச் சொல்லுமது இது. பிராட்டி இராவணபவனத்தில் பத்துமாதங்கள் வாஸஞ்செய்தாளென்பதுபற்றிய தூஷணத்தை அப்போதே அக்நிப்ரவேசாதிகளாலே பரிஹரித்து அடக்கியிருந்தும், நாய்க்கடிவிஷம்போலே மீண்டுமிப்போது கிளம்பியிருக்கிறது போலும்—என்கை.

ஆழ்வார்களின் கால ஆராய்ச்சியில் கைவைத்தசிலர் மனம்போனபடியெழுதிப் போந்தவற்றையெல்லாம் நாம் பலமுறை தக்கசான்றுகளாலே கண்டித்திருக்கிறோம். இருபதாண்டுகட்கு முன்பு வடநாட்டு யாத்திரையில் என்னோடு கலந்துகொண்டு ஒருமாதகாலம் யாத்திரைசெய்து திருப்பிய (காலஞ்சென்ற) மு. ராகவையங்கார வர்கள் முப்பதுநாள் வழிமுழுவதும் வாநாடிவந்து (மு. ராகவையங்கார்) என்பதற்கு முட்டாள் ராகவையங்கார் என்று பொருள் என்று சித்தாந்தம் செய்தவரலாறுகள் அவருடைய ஜீவிதகாலத்திலேயே ஏடேறிக்கிடக்கின்றன.

செந்தமிழாராய்ச்சி முதலான என்னு நூல்கள் உலகம் பரவிக்கிடக்கின்றன. நவீனர்களின் ஆராய்ச்சித்திறன் எப்படிப்பட்டதென்பதைச்சிறிது நிரூபிப்போம். "ராமாநுஜர்க்கு உடையவர் என்றும் எம்பெருமானார் என்றும் திருநாமமாதலால், தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் (36)* உடையவர் வலையுட்பட்டு* என்று உடையவரை ப்ரஸ்தாவித்திருக்கையாலும், திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (2-6.9)* எம்பெருமானார்க்கிடம்* என்று எம்பெருமானாரை ப்ரஸ்தாவித்திருக்கையாலும் இவ்வாழ்வார்களிருவரும் ஸ்ரீராமாநுஜர்க்குப்பிற்பட்டவர்களென்று திடமாகநிச்சயிக்கலாகும்; குலசேகராழ்வார் பெருமாள் திருமொழியில் (2-2.)* தொண்டரடிப்பொடியாடநாம் பெறில்* என்று தொண்டரடிப்பொடியாழ்வாரை ப்ரஸ்தாவித்திருக்கையால் குலசேகராழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார்க்கும் பிற்பட்டவரென்பது ஐயமறத் தெரிவதாம்.....என்று இத்தகைத் தேயாம் இவர்களது ஆராய்ச்சிப் புலமை.

"பூதம் ஸரச்ச மஹதாஹ்வயபட்டநாத......"என்கிற பட்டர் அருளிச்செய்த நித்யாநுஸந்தானத்தனியன்பொருளைக் குருமுகமாகக் கேளாமல், இதில், பரகாலரான திருமங்கையாழ்வாருக்குப் பின்னுல் ஸ்ரீராமாநுஜரைக் கூறி, அவர்க்கும் பின்னுல் பராங்குசரான நம்மாழ்வாரைக் கூறியிருத்தலால் 'ஸ்ரீராமாநுஜர்க்கும் பிற்பட்டவர் நம்மாழ்வார்' என்பதும் இவர்களது ஆராய்ச்சியில் தேறுவதாம்.

விச்வாமித்ரர், வஸிஷ்டர், வாமதேவர், அத்ரி, ஜமதக்நி, பரத்வாஜர்...... என்று சொல்லப்படுகிற மஹர்ஷிகளுள் இன்னுர் பிந்தியவர் என்பதை ஆராய்ந்து நிர்ணயிப்பதில் இவர்கள் ஏன் புகவில்லையோ?

மூன்று திருவந்தாதிகள், திருச்சந்தவிருத்தம், நான்முகன் திருவந்தாதி, அமலனுதிபிரான், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவெழுகூற்றிருக்கை,

இரண்டு திருமடல்கள், இராமாநுசநூற்றந்தாதி...... இத்திவ்வியப்பிரபந்தங்களில் கர்த்தாக்களின் திருநாமங்கள் காணுமையாலே அவரவர்கள் தங்கள்தங்களிஷ்டப் படி கர்த்தாக்களைக் கற்பிக்கலாம்.

சில்வாண்டுகட்குமுன்பு ஒரு மாதாந்தப் பத்திரிகையில் "இலங்கையில் சீதாபிராட்டி வசித்தபோது அவள் இராவணனுக்கு எழுதிய காதற் கடிதம் இதோ கிடைத்துவிட்டது, பிரசுரிக்கப்படுகிறது பாருங்கள்" என்றொரு [அநுவதித்தாலும் பாதகம் மிகும்படியான] கட்டுரை வெளிவந்தது. தம் தம் முதுகில் இன்னது உள்ளதென்று அறியமாட்டாதவர்கள் ஆயிரமாண்டுகட்கு முற்பட்ட விஷயங்களில் விதண்டாவாதங்கள் செய்யப்புறப்படுவது பேதைமை.

எந்த வகுப்பிலும் பிராமாணிகர்களென்று போற்றத்தக்கவர்கள் பலருண்டு. அன்னவர்கள் வாயடங்குமாறு நாம் தெரிவிக்கும் விஷயங்கள் சில பல கேளீர். ஸ்ரீபாகவதம் என்கிற புராண நூல் பன்னிரண்டு ஸ்கந்தங்கள் கொண்டது; தர்மதஸ்தர்களான ஸகல வைதிகர்களாலும் போற்றப்படுவதாகும். அதில் பதினோராவது ஸ்கந்தத்தில் ஐந்தாமத்யாயத்தில் *கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:, தாம்ரபர்ணீநதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ...* இத்யாதி ச்லோகங்கள் விளங்குவதை யாரும் அபலபிக்கமுடியாது. இந்த வசனங்களையெல்லாம் எண்ணூறுண்டுகட்கு முற்பட்ட ஆசாரியர்கள் தந்தம் கிரந்தங்களில்விரிவாக எடுத்துக் காட்டியுள்ளார்கள். மற்றொரு முக்கியமான விஷயங்கேளீர். நாம்அடிக்கடி உதாஹரிக்கிற பட்டர் எனகிற ஆசாரியர் [ஸ்ரீபராசரபட்டர்] கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர். இவர் ஸ்ரீராமாநுஜரையும் ஸேவித்தவர். இவரருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பூர்வசதகத்தில் சந்த்ரபுஷ்கரிணியை இரண்டுசுலோகங்களினால் வருணித்தபின்பு அடுத்தசுலோகம் *பூர்வேண தாம் தத்வத்* இத்யாதி. இதில் "பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் த்யேரந்" என்பது உத்தரார்த்தம். "வீற்றிருந்த திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கின்ற நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும் எனக்கு அருள் புரியவேணும்— என்று பிரார்த்திக்கப்படுகிறது இதில். சந்திர புஷ்கரிணியின் கீழண்டைப் பக்கத்திலுள்ள வாஸுதேவப்பெருமாள் ஸந்நிதியில் ஆழ்வார்கள் பதின்மரும சிலாவிக்ரஹமாக இற்றைக்கும் ஸேவை ஸாதித்தருள்வதைக் காணலாம். இதனால் ஆயிரமாண்டுகட்கு முன்னமே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் விக்ரஹ ப்ரதிஷ்டை யாகியிருப்பதை யுணரலாம்.

விக்ரஹ ப்ரதிஷ்டை யென்பது அவரவர்கள் ஜீவித்திருந்த காலத்திற்கு ஸமீபகாலத்தில் நடந்து விடாது. அவர்களின் புகழ் உலகில் விசேஷமாகப் பரவி அதிகப்ரக்யாதி ஏற்பட்டபின்புதான் நடைபெறும், இஃதொன்றேபோதும் ஆழ்வார்களின் புராதனத்வத்தை ஸ்தாபிக்க.

திருமங்கையாழ்வார் திருவரங்கம் பெரியகோயிலில் கோபுரப்ராகார மண்டபாதிதிருப்பணிகள் நடத்தினபோது ஜைநபௌத்த ஸ்வர்ண பிம்பங்களைக் கொண்டு நிருமித்ததாகவுள்ள இதிஹாஸத்தையும் இந்நவீன ஆராய்ச்சிக்காரர்கள் கற்பனைக் கதைகளென்று எழுதியுள்ளார்களாம். ஐம்பது வருடங்களுக்குமுன் ஸ்ரீமதஹோபில மடத்துப்பத்திரிகை வேதாந்த தீபிகையென்னும் பெயரால் நடந்து வந்தகாலத்துல்

அதற்கு ஆசிரியராயிருந்த ஸ்ரீமான் திவான்பஹதூர் (திருவுள்ளூர், வைகுண்ட வாஸி. T. T. ரங்காசாரியார் அவர்கள் இந்த துர்வாதத்தை அப்பத்திரிகையில் வலிதாகச் செய்திருந்தார். அப்போது நாம அதற்குக் கண்டனத்தை விரிவாக எழுதி அனுப்பியிருந்தோம். அதன்பின் என்னுயிற்றென்பதை நாம் ஐந்தாறுவிசை வெளியிட்டிருக்கிறோம். உலகமுழுது முணரும். கீழே ப்ரஸ்தாவித்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பூர்வசதகத்தில் ஸ்ரீரங்ககோபுரப்ராகாரமண்டபாதிகளைத் தொழுதிறைஞ்சுகின்றபட்டர் "ஜிதபாஹ்யஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்" என்கிற சுலோக ரத்நம் [றரொருவரால் பிரசனபண்ண நெஞ்சாலும் நினைக்கமுடியாதது) இந்தச் சடங்கர்களின் வாயையும் கையையும் அடக்கித் தொலைப்பதாகும்......ஆக இவ்வளவும் மேலே ப்ரஸ்தாவித்த அட்வகேட் வரததேசிகனவர்களிடத்தில் உபந்யஸிக்கப்பட்டதாம். ... ... ... ... ...

## கண் தரும் பெரியார்



சென்ற வருஷத்தில் நமது பத்ராதிப ஸ்வாமிக்கு நேத்ர சிகிச்சை நடைபெற்றதை அன்பர்கள் அறிவர்கள். இங்கே காட்சிதரும் ஸ்ரீமான் N. ஸ்ரீநிவாஸன் D.O. (Oxon) D.O.M.S., R. C. P. S, (Lond) F. C. G. P., அவர்கள் தாம் ஸ்ரீ ஸ்வாமிக்குத் திருக்கண்ணொளி நல்கியவர். அதன் பின்னும்முன்னும் காஞ்சீபுரியிலிருந்தும் பிறவிடங்களிலிருந்தும் பலர் இவரையணுகிக் கண்பார்வை பெற்று மகிழ்ந்துள்ளனர். இவ்வாண்டு நடைபெற்ற மீன விசாக மஹோத்ஸவத்தில் ஒருநாள் குடும்பத்துடன் வந்து கலந்துகொண்டு மகிழ்ந்து மகிழ்வித்தார். கண்மருத்துவத்தில் சிறந்து விளங்கும் உப்பெரியார் பழகுதற்கினியராயுள்ளனர். உலகுக்கே கண்போன்று திகழும் நம் ஸ்வாமிக்குக் கண்ணொளி கொடுத்த இவர் திறத்துத்தலையல்லாற் கைம்மாறிலோம். சென்னை வாழ் அன்பர்களான ஸ்ரீமான் உ. வே. A. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், ஸ்ரீமான் புலிபாடி ஸோமஸுந்தரராவ், ஸ்ரீமான் A. V. கன்னையநாயுடு போன்றவர்கள் மூலமாக இவருடைய பரிசயம் ஏற்பட்டது.

—*T. A. A.*

## விவாஹ நிகழ்ச்சி

சென்னையில் விளங்கும் ஸ்ரீமான் உ. வே. (திருச்சேறை) திருமலாசாரியருடைய குமாரத்தி ஸௌபாக்யவதி வனஜாவுக்கும் ஆழ்வார்திருநகரி ஸ்ரீமான் உ. வே. ஜீயப்பர் தேவ்ராஜ ஐயங்காருடையகுமாரன் சிரஞ்சீவி சடகோபனுக்கும் 16-3-75ல்

விவாஹம் சென்னையில் இனிது நடைபெற்றது. மணமக்களுக்கு நாம்எழுதியனுப்பி யிருந்த வாழ்த்துப்பாக்களை இங்கே மகிழ்ச்சியுடன் வெளியிடுகின்ருேம். (P. B. A.)

ஸ்ரீ:

சுபமஸ்து

# மணமக்களுக்கு மங்கல வாழ்த்து.

(வெண்பாக்கள்)

1. ஆழ்வார் திருநகரில் ஆவிர்ப் பவித்ததனுல்
தாழ்வாது மில்லாச் சடகோப!—தாழ்வொன்று
மில்லா வனசாவின் இன்பமுறு வாழ்க்கைதனுல்
எல்லா மெளிதா மெமக்கு.

2. மாநிலத்தில் மாண்பெல்லாம் மல்குமிந்தத் தம்பதிகள்
நானிலத்தில் மேல்மேலும் நன்மைமிக—ஞானிகளின்
ஆசிகளு மாழ்வார்க ளாரியர்க ளாருளும்
வீசி விளங்குதக வே.

3. தனதான்யச் செல்வமெலாம் தாரணியோர் செவ்வும்
வனசாவைக் கைட்பிடித்த வாழ்வால்—தினந்தினமும்
தண்சேறை யெம்பெருமான் தாயரைக்கண் நோக்கதனுல்
திண்சேர மல்கும் சிறந்து.

விருத்தம்.

அரங்கநகர் நாயகனும் அணி திருவேங்கடத்தானும்
வரங்கள்தரும் மணிவணனும் வண்சேறை நாயகனும்
பரந்தவிந்தப் பாரதனில் பல்வேறு செல்வமெலாம்
நிரந்தரமும் நுந்தமக்கு நீடூழி நல்கிடவே.

16—3—75.

P. B. அண்ணங்கராசாரியார்,
மஹாவித்வான்.

# ஸ்ரீராமாநுஜன் 323



ஆசிரியர்:

ஸ்ரீஜகதாச்சார்ய மஹாமஹிமோபாத்யாய

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்

P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 27 | ராக்ஷஸ ஸ்ரீ வைகாசி மீ | ஸஞ்சிகை 11 |
|---|---|---|


## வைகாசி யுத்ஸவ விஞ்ஞாபனம்.

அன்புடையீர்!

குறிக்கொண்டது கேண்மின். ஒவ்வொரு தேவஸ்தானத்திலும் பெரும்பாலும் வருஷோத்ஸவமென்று நடைபெறுவதுண்டு. அதை ப்ரஹ்மோத்ஸவமென்றே எங்கும் வழங்குவர். சதுர்முக ப்ரஹ்மா (நான்முகக் கடவுள்) நடத்தி வைத்த உத்ஸவம்என்பதுபற்றி ப்ரஹ்மோத்ஸவமென வழங்கப்படுகிறது. புராணஸித்தமாகப் பிரமன் நடத்திவைத்த வருஷோத்ஸவம் இக்காஞ்சீபுரியிலேயாகும். **காஞ்சீ** என்கிற நகரப்பெயரே "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி:, தஸ்மாத் காஞ்சீதிவிக்யாதா புரீ புண்யவிவர்த்திநீ" என்கிற புராணவசனத்தின்படி பிரமனால் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டு ஆராதிக்கப்பட்ட எம்பெருமான் எழுந்தருளியதனால் காஞ்சீ-என்று தேறுகின்றது. பிரமன் எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்று முதன முதலாகப்புஷ்கர க்ஷேத்திரத்திற்சென்று தவம் புரிய. அங்கே தீர்த்த ரூபியாகப் பகவான் ஸேவை ஸாதித்தார். அதனால் த்ருப்தியடையாத பிரமன் நைமிசாரணியஞ் சென்று அங்கே நெடுங்காலம் தவம்புரிய எம்பெருமான் அரண்ய ரூபியாக ஸேவைஸாதிக்க, அதிலும் திருப்தி பெருத நான்முகன் மிகவும் கிலேசப்பட்டு அழுது அலற்ற, ஆகாசவாணி கூறிற்று-ஆயிரம் அச்வமேதயாகம் செய்தால்

தான் பகவானை ஸாக்ஷாத்கரிக்க முடியும்; அத்தனையாகங்கள் செய்து பேறு பெற வேணுமேயென்று வருந்துவாயாகில், தக்ஷிண திக்பாகத்தில் ஸத்யவ்ரதக்ஷேத்திரமென்றிருக்கிறது; அங்குச்சென்று ஒரு அச்வமேதயாகஞ்செய்தாலும் அது ஆயிரம் அச்வமேதயாகம் செய்ததோடொக்கும்; நீ அங்குச் சென்று ஒரேஒரு அச்வமேத யாகஞ்செய்து 'பகவத்ஸாஷாத்காரம் பெருவாயாக"—என்று. அப்படியே பிரமன் தொண்டை மண்டலம் என்று வழங்கப்படுகிற ஸத்யவ்ரதக்ஷேத்ரபாகமாகிய இந் நாட்டிலே வந்து சேர்ந்து மஹர்ஷிகள் பலரையும்திரட்டி அச்வமேதயாகம் பண்ணிப் புண்யகோடி விமானத்தில் ஸேவைஸாதித்தருளின தேவாதிராஜனைஸேவித்துதக்ருதக்ருத்யனாகி, சிலவாண்டுகள் இங்கேயே தங்கியிருந்து நித்யோத்ஸவபக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத் ரோத்ஸவாதிகளை நடத்திப்போந்தனன்.

ஆக, பிரமன் தானே நடத்திவைத்த உத்ஸவமாதலால் ப்ரஹ்மோத்ஸவமென்று பேர்பெற்றது இத்தலத்திற்கே அஸாதாரணமாகும். இதனை "வையங் கண்ட வைகாசித் திருநாள் என்பர் நெடுநாளாகவே. ● உலகேத்து மாழியூரான் அத்தியூரான் ● என்றார் பூதத்தாழ்வார். 'அத்தியூரான்' என்றது ஹஸ்திகிரிநாதன் என்றபடி. அடுத்த பாசுரத்தில் * அத்தியூரான் புள்ளையூர்வான் * என்றருளிச் செய்தமையால், பெரிய திருவடித் திருவிழாவாகிய கருடோத்ஸவத்திற்கு இத்தலத்திலேயே ப்ராதான்யம் மேம்பட்டிருக்கும். இவ்விடத்து உத்ஸவத்தின் சிறப்புகள் நேரில் அநுபவித்தவர்களின் சிந்தைக்கே கோசரமாகும்.

இந்த மஹோத்ஸவத்தில் நம்மாழ்வாருடைய திருநக்ஷத்ரோத்ஸவமும் கூடுதலால் உத்ஸவத்தின் மேன்மை வாசாமகோசரமாகும். ப்ரஹ்மோத்ஸவத்தின் பூர்வாங்கமாகப் பெருந்தேவித்தாயாருக்கு நடைபெறும் கடைவெள்ளிக்கிழமைத் திருநாள் 16—5—75-ல் நடைபெறும். அதற்கு முதல் நாளே நம்மாழ்வாருடைய திருநக்ஷத்ரோத்ஸவம் தொடக்கமாகும். காலை வேளைகளில் ஆழ்வார்க்குத் திருமஞ்சனமும் திவ்யப்ரபந்த ஸேவை சாத்துமுறை கோஷ்டியும், மாலை வேளைகளில் திருவாய்மொழி ஸேவை சாத்துமுறை கோஷ்டியும் பரமவிலக்ஷணமாக நிகழும்.

ப்ரஹ்மோத்ஸவத்வஜாரோஹணம் 22—5—75 பின் மாலை.

பெரிய திருவடிமஹோத்ஸவம்: 24—5—75

திருத்தேர்: 28—5—75

அவபிரதம் 29—5—75

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



# நம்மாழ்வாரநுபவம்.

□ □ □ □

**ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.**

ஆழ்வார்களுள் நம்மாழ்வார் அவதார முறையில் ஐந்தாமவராயினும் பல காரணங்களையிட்டு இவரே முதன்மை பெற்றிருப்பர். சடகோபர், சடாரி, பராங்குசர், வகுளாபரணர், காரிமாறன், திருநாவீறுடையபிரான் என்னும் இவைமுதலான திருநாமங்களும் இவ்வாழ்வாருடையனவே. இவருக்கு நம்மாழ்வார் என்னும் திருநாமம் சிறப்புப் பெயராக ஸ்ரீ ரங்கநாதன் மூலமாகக் கிடைத்ததாம். நான்கு வேதங்களின் சாரமாக இவர் அருளிச் செய்தவை திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு திவ்வியப் பிரபந்தங்களாம். மற்றுமுள்ள ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களையுங் காட்டிலும், இவ்வாழ்வாருடைய மற்ற மூன்று திவ்வியப் பிரபந்தங்களைக் காட்டிலும் திருவாய்மொழியே மிக்க மேன்மை பெற்று விளங்குவது. கம்பர்பெருமான் இயற்றிய சடகோபரந்தாதியில் "தேவிற் சிறந்த திருமாற்குத்தக்க தெய்வக் கவிஞன், பாவிற் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே" என்றுள்ள செய்யுளினால் நம்மாழ்வாருடையவும் திருவாய்மொழியினுடையவும் மேன்மையைச் சுருக்கமாக உணரலாம்.

திருவாய்மொழியானது நூறு பதிகங்களாக அமைந்த ஆயிரத்தொரு நூற்றிரண்டு செய்யுள்களை உடையது. நூறு பாடல்களை 'ஒரு பத்து' என வழங்கும் வைணவ சம்பிரதாயப்படி பத்துப்பத்தாக அமைந்தது இது. இப்பிரபந்தம் முழுவதும் அந்தாதித் தொடையில் பாடப்பட்டது. இவர் அருளிச் செய்த மற்ற மூன்று திவ்வியப் பிரபந்தங்களும் அந்தாதியே. இவ்வந்தாதி, சொற்றொடர் நிலை, பொருட்டொடர் நிலை என்ற தொடர் நிலைவகை இரண்டனுள் சொற்றொடர் நிலையெனக் கருதத் தக்கதாயிருக்கும். நெடுக ஒரு கதையாகக் கூறுதலல்லாமல் தோத்திர ரூபமாக அருளிச்செய்யப்பட்ட பாசுரங்களாதலால் சொற்றொடர் நிலையந்தாதியாகக் கொள்ளக் குறையில்லையாயினும், இதிலுள்ள பாசுரங்கள் பொருளில் ஒன்றையொன்று தொடர்ந்து நிற்பது தோன்ற அறிவிற் சிறந்த ஆசிரியர்கள் வியாக்கியானித்தருள்வதனால் இது பொருட்டொடர் நிலையுமாம். "பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர் நிலை" என்னும் தண்டியலங்காரச் சூத்திரத்தின் உரையில், "இரண்டெனனுது வகை என்ற மிகையான் மூன்றாவது பொருளினுஞ் சொல்லினுந் தொடர்தலுமுண்டெனக் கொள்க" என்றுள்ளது. அதற்குத் திருவாய்மொழியே சான்றாமெனக் கொள்க. சொற்றொடர் நிலையந்தாதிக்குச் சான்றான பல பிரபந்தங்களும், பொருட்டொடர் நிலையந்தாதிக்குச் சான்றான பல பிரபந்தங்களும் காணக் கிடைப்பினும், பொருளினுஞ் சொல்லினுந் தொடரும் அந்தாதிக்குத் திருவாய்மொழியே தக்க சான்றாமென்க.

தொல்காப்பியத்துச் செய்யுளியலிற் கூறப்பட்ட அம்மை, அழகு தொன்மை, தோல், விருந்து இயைபு, புலன், இழைபு—என்ற எண்வகை வனப்பினுள் இந்த நூல் விருந்தென்னும் வனப்பின்பாற்படும். "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்ற தொல்காப்பியச் சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் "விருந்து தானும் பழங்கதை மேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டியவற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்துவரத் தொகுத்துச் செய்யப்படுந் தொடர்நிலை மேலது" என்றுரைத்து அது முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க" என்று முடித்திருத்தல் காண்க.

திவ்வியப் பிரபந்தங்கள் எல்லாவற்றினுள்ளும் திருவாய்மொழியின் ஏற்றத்தை ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான முன்னோர்கள் உலகமறியச் செய்திருக்கும் வகையொன்று கேண்மின். மற்றைப் பிரபந்தங்கள் விஷ்ணுவாலயங்களில் திருவீதிகளிலும் ஓதப்படுவது போல, திருவாய்மொழியை ஒருபோதும் வீதியில் ஓதலாகாதென்றும், எம்பெருமானோ ஆழ்வாராசாரியர்களோ ஆஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கும்போது மட்டுமே சேவிக்கத்தக்கதென்றும் பெரியாரிட்ட கட்டளை இன்றைக்கும் பரிபாலிக்கப்பட்டுவருவது திவ்வியப் பிரபந்தங்கள் வழங்கும் நாடுகளிலெங்கும் காணத்தக்கதாம் திருவாய்மொழியிலுள்ளவையெல்லாம் வேதப்பொருள்களேயென்றும், வேதப்பொருள்களைத் திரட்டி நம்மாழ்வார் திருவாய்மொழி பாடியருளாதிருப்பின் வைணவக் கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள் சிறிதும் சோபிக்கமாட்டாவென்றும் கம்பர்பெருமான் துணிந்து கூறியுள்ளார், சடகோபரந்தாதியில்:

**"அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்தவரும் பொருளைச்**
**செந்தமிழாகத் திருத்திலனேல், நிலத்தேவர்களும்**
**தந்தம்விழாவு மழகுமென்னும்? தமிழார் களியின்**
**பந்தம் விழாவொழுகுங் குருகூர்வந்த பண்ணவனே"**

என்பது அந்தச் செய்யுள்.

வடமொழி வேதப்பொருள்களே திருவாய்மொழியில் விளங்குவனவென்பதைக் கம்பர் எதுகொண்டு உணர்ந்தாரெனின்; வேதக்கடல் குடைந்தாடின நாதமுனிகள் ஆளவந்தார்போல்வாரான பேராசிரியர்கள் பரிக்ரஹித்தது கொண்டேயென்க. தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்னும் மூவகைப் பொருள்களையும் வடமொழி வேதங்களிலிருந்தே உய்த்துணர வல்லவர்களான அப்பேராசிரியர்கள் அவற்றைவிட்டு இப்பாடல்களையே தஞ்சமாகக்கொண்டும், இவற்றுக்குத் திவ்வியப் பிரபந்தமென்று பெயரிட்டும், இவற்றில் பாடப்பெற்ற தலங்களைத் திவ்விய தேசமென் வழங்கியும், இவற்றைப் பாடினவர்களைத் திவ்விய ஸூரிகளென்று சிறப்பித்தும் போந்ததைக் குறிக்கொள்பவர்கட்கு இவ்வேற்றங்களெல்லாம் தெற்றென விளங்கும்.

திவ்வியப் பிரபந்தங்களான நாலாயிரம் பாசுரங்கட்கும் பெரியவாச்சான் பிள்ளையென்னும் பேராசிரியர் வியாக்கியானமிட்டருளினர். திருவாய்மொழியாயிரத் திற்கு மட்டும், திருக்குருகைப்பிரான் பிள்ளானென்னும் ஆசிரியர் ஆறுயிரப்படி யுரையும், நஞ்சீயர் ஒன்பதினாயிரப்படியும், பெரியவாச்சான்பிள்ளை இருபத்துநாலா யிரப்படியும், வடக்குத் திருவீதிப்பிள்ளை ஈடு முப்பத்தாறாயிரப்படியும், வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் பன்னீராயிரப்படியும் ஆக ஐந்து வியாக்கியானங்களை யருளிச்செய்தார்கள். இவை தவிர, திருவாய்மொழியின் சாரப் பொருள் கூறும் வகையில் வேதாந்த ஆசிரியர், மணவாளமாமுனிகள் முதலான ஆசிரியர்கள் வட மொழி தென்மொழிகளில் அருளிய நூல்களுமுள்ளன. திருவாய்மொழிக்குப் பிரதான வியாக்கியானகர்த்தாவான வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருப்புதல்வ ரான பிள்ளைலோகாசாரியர், அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் என்னும் ஆசிரியர் இருவர் முறையே அருளிச்செய்த ஸ்ரீவசனபூஷணமும் ஆசார்ய ஹ்ருதய மும் திருவாய்மொழியின் அரியபெரிய பொருள்களையே ஆராய்ச்சி முறையில் ஆழ்ந்து அற்புதமாக வெளியிட்டிருப்பனவாம். இவற்றுள் ஆசார்யஹிருதய நூலின் பெருமை அளவிடற்பாலதன்று. திருவாய்மொழியின் ஒப்புயர்வற்ற பெருமைகளும் சீரிய பொருள்களும் அந்நூலில் உணர்த்தப்படுவதுபோல் வேறு எந்நூலிலுமில்லை யெனின் மிகையாகாது.

இனித் திருவாய்மொழியில் உட்புகுந்து சில மருமங்களையும் தத்துவங்களை யும் உணர்த்துவோம். வடமொழி வேதத்தை முதன்முதலாக நான்முகக் கடவுள் பிரவசனஞ்செய்ததுபோல இத்தமிழ்வேதத்தையும் நம்மாழ்வார் நான்முகன்போலவே யிருந்து வெளியிட்டருளினர். எங்ஙனேயென்னில்; ஆழ்வார் தம் ஒருவரே திருவாய் மொழியைப் பேசினரெனினும் நான்குமுகமாகப் பேசியுள்ளபடியை இதனில் காண் கிறோம். தாம் குருகூர்ச் சடகோபனுகவே (ஆண்மை மாறுமல்) இருந்துகொண்டு பேசினது ஒருவகை. இங்ஙனே பேசினவை எழுபத்துமூன்று பதிகங்கள். ஆண்மை நீங்கிப் பெண்மையெய்தி, அதில் தலைமகளென்றும் தாயென்றும் தோழியென்றும் பாவனை கொண்டு பேசின வகைகள் மூன்று. தலைமகள் பாசுரமாக நிகழ்ந்தவை பதினேழு பதிகங்கள். தாய்ப்பாசுரமாக நிகழ்ந்தவை ஏழு பதிகங்கள். தோழி பாசுர மாக நிகழ்ந்தவை மூன்று பதிகங்கள். ஆக நான்குமுகங்களால் பாடப்பெற்றது. நூறு பதிகங்கள் கொண்ட திருவாய்மொழியாயிரம். இயற்கையான ஆண்மையை விட்டுப் பெண் பாவனை கொள்வது எதற்காக? அப் பெண்பாவனையிலும் மகள், தோழி, தாய் என்னும் வேற்றுமைகள் எதற்காக? என்ற கேள்விகளுக்குச் சுருக்க மான விடை கேண்மின். புருஷோத்தமனை பகவானையநுபவிக்குமிடத்து ஆண்மை விலகுவதும் பெண்மை புகுவதும் இயல்பு. உலகில் நாயகி தனது நாயகனொரு வனுக்கே அடிமைப்பட்டிருத்தலாகிற பாரதந்திரியத் தன்மையைக் கொண்டிருக்கு மாறுபோல, பரமபக்தர்கள் எம்பெருமானொருவனுக்கே அடிமைப்பட்டிருக்குந்தன்மை திடப்பட்டு விளக்குவதுதான் பெண்பாவனையின் மருமம். இதனைக் குலசேகராழ்வார் தமது திருமொழியில் வித்துவக்கோட்டம்மான் பதிகத்தில் 'கொண்டானையல்லால் அ றியாக் குலமகள் போல்' என்ற பாசுரத்தினுல்விளக்கினர் ஆழ்வார்திறத்துக்காணும்

பெண்மை சாமான்யமானதன்று; "கடிமாமலர்ப் பாவையொப்பாள்"—என்றும் "பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்றும் கூறியுள்ளபடியே ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவியென்னும் தேவதேவ திவ்ய மஹிஷிகளின் பாவனையேயுள்ளது. எம்பெருமான் அத்தேவிமாரிடத்துக்காதல் கொண்டதுபோலவே ஆழ்வாரிடத்துங் காதல் கொண்டது பலபல பாசுரங்களினால் நன்கு விளங்கும். மகள் பாசுரமாக வெளிவரும் பதிகங்களில் எம்பெருமானைப் பெறுதலில் ஆழ்வார்க்கு உள்ள விரைவுமிகுதி காணலாகும். தாய்ப் பாசுரமாக வெளிவரும் பதிகங்களில் பேற்றுக்கு விரையவேண்டாத திண்ணிய உறுதி காணலாகும். தோழி பாசுரமான பதிகங்களில் ஆழ்வாரும் எம்பெருமானுமாகிற தலைவிக்கும் தலைமகனுக்குமுள்ள ஒழிக்கவொழியாத உறவு அற்புதமான முறையில் விளக்கப்பெறும்.

உபயவேதாந்தப் பிரவர்த்தகர்களென்று விருதுபெற்ற ஆளவந்தார் எம்பெருமானார் கூரத்தாழ்வான் (அவரது திருக்குமாரரான) பட்டர் நம்பிள்ளை முதலான மஹா வித்துவான்கள் கைக்கொண்டு அரும்பெரும் பொருள்களைக் கங்காப்ரவாஹம் போன்ற உபந்யாஸங்களினால் பெருக்கியதுகாரணமாகவே திருவாய்மொழி மிக மேம்பாடுற்றது. அத்தகைய பொருள்களில் சிலவற்றையே இங்கு விவரிக்க விரும்புகின்றேன்.

திருவாய்மொழியின் தொடக்கப் பாசுரம் 'உயர்வறவுயர் நலமுடையவன்' என்பது. அதன் ஈற்றடியில் "துயரறு சுடரடி" யென்றுள்ளது. 'துயரறு' என்பதற்கு (அடியவர்களின்) துயரையறுக்கின்ற என்னும் பொருள் கூறுவதில் இழுக்கொன்றும் இல்லை. ஆனால் ஸ்ரீராமாநுஜர் கூறும் பொருள் இன்சுவை மிக்கதாகவுள்ளது. துயரறுக்கும் என்று கொள்ளாமல் 'துயரறும்' என்று உரைத்து, அடியார் துயருற்றிருந்த காலத்துத் தானும் துயருற்றிருந்து, அவர்கள் துயரற்றவாறே தானும் துயர் அறுவது எம்பெருமானது இயல்பாக இதிஹாஸ புராண வரலாறுகளினால் நன்கு தெரிவதனாலும், குணத்துக்கு எல்லைநிலம் இதுவேயாதலாலும் இப்பொருளை ஆதரித்தனர் ஸ்ரீராமாநுஜர்

திருவாய்மொழியில் நான்காவது பதிகம், 'அஞ்சிறைய மடநாராய்' என்று தொடங்குவது. இது சில பறவைகளை எம்பெருமானிடத்துத் தூது செல்ல இரப்பது. இதில் (பாட்டு 4—ல்) "என்னீர்மை கண்டிரங்கி இது தகாதென்னாத என்னீல முகில் வண்ணர்க்கு என்சொல்லி யான் சொல்லுகேனோ?" என்றுள்ளது. எனது நிலைமையைக் கண்டு இரங்கி இவளை நாம் அணுகாதிருப்பது தகாது-என்றிராதவர்க்கு நான் என்ன வார்த்தை சொல்லுவது? என்று பறவைகளை நோக்கிக்கூறுவதாக உள்ளது. இது தூது விடுமிடத்ததாதலால் பிரிவில் சொல்லும் வார்த்தையென்பது ஐயமற்றது. பிரிவில் இத் தலைவி யிருக்குமிருப்பை யாரேனும் சொல்லத் தலைவன கேட்கலாமேயொழிய, தான் நேரில் காணமுடியாதன்றோ? ஆகவே, 'என்னீர்மை கேட்டிரங்கி' என்றிருக்கத்தகுமேயல்லது 'கண்டிரங்கி' என்றிருக்கத் தகாதேயென்று சங்கித்த ஒரு தமிழ்ப் புலவனுக்கு, பட்டர் எனும் ஆசிரியர், பண்டிதரே! நன்கு கேட்டீர்; ஆனால் "புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன், அவ்வளவில் அள்ளிக்

கொள்வற்றே பசப்பு" என்ற குறளும் "ஊருண்கேணி உண்துறைத்தொக்க பாசியற்றே பசலை. காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்கிற குறுந்தொகைச் செய்யுளும் உமக்குத்தெரியாது போலும்' என்று கூறி, இவற்றைப் பரக்க உபந்யஸித்து அப்பண்டிதரைத் தெளிவித்தனர்.

இதன் விவரணம் வருமாறு: 'புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன்' என்ற குறள், திருக்குறளில் பசப்புறுபருவரல் என்னும் அதிகாரத்தில் ஏழாவதாகும். இது காதலியின் பேச்சு. 'முன்பொரு நாள் நான் காதலரை அழுந்தத் தழுவிக் கிடந்தேன்: கைமாறுவதற்காகச்சிறிது புடைபெயர்ந்தேன்: ஒரு நொடிப்பொழுது விலகின அளவிலும் பசலை நிறம் வந்து உடம்பெலாம் மூடிக்கொண்டது' என்பது இக்குறளின் பொருள். இதனால் நாயகனைப் பிரியாமல் கூடியிருக்குங் காலத்திலேயே படும். அலமாப்பு தெரியவரும். இனி, குறுந்தொகைச் செய்யுள் இக்கருத்தையே உதாரணத்துடன் வெளியிட்டுள்ளது. (குறுந்தொகையில் முந்நூற்றுத் தொண்ணூற்றேன் பதாவது செய்யுள் 'ஊருண்கேணி...... பரத்தலானே' என்பது. ஊரில் உள்ள மக்களாலே நீர் எடுத்து உண்ணப்பெறுகின்ற கேணியினுள்ளே படர்ந்து கிடக்கும் பாசி போன்றது பசலைநிறம். பாசியின் தன்மை எத்தகைத்தென்றால், தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்ட இடங்களில் பாசி நீங்கும்; கையை எடுத்து விட்டோமாகில் உடனே நீங்கின பாசி மூடிக்கொள்ளும்; பசலை நிறமும் இது போன்றதே; காதலர் தொடுவுழித் தொடுவுழி—நாயகன் தொட்ட தொட்ட இடங்கள் தோறும் பசலை நிறம் நீங்கி; விடுவுழி விடுவுழிப் பரத்தலான்—விட்ட விட்ட இடங்கள் தோறும் அது வியாபிப்பதனாலேயென்கை. பிரிவாற்றாமையினால் மாதர்களின் மேனியில் தோன்றும் நிறவேறுபாடு பசலை நிறமெனப்படும். நாயகனை விட்டுப்பிரிந்த காலத்திலே நாயகியின் உடலில் இந்த நிற வேறுபாடு தோன்றுவது வியப்பன்று; ஒரு படுக்கையில் படுத்துக் கூடியிருக்கும்போதே நொடிப் பொழுது கைநெகிழ்ந்த அளவில் இந்தப் பசலைநிறம் படர்கின்றதென்றால் பிரிந்த நிலையில் கேட்கவேண்டிய தில்லை யன்றோ! பட்டரிடத்தில் கேள்வி கேட்ட புலவர்க்கு இப்போது என்ன ஸமாதான மாயிற்றென்னில்; தூது பாசுரம் பிரிவு காலத்தில் சொல்லுவதானாலும் பண்டு கூடியிருந்த காலத்தில் நிகழ்ந்த ஸம்பவத்தையே (என்னீர்மை) என்பதனால் நினைப்பூட்டுவதாதலால் கேட்டிரங்கி யென்னவேண்டுவதில்லை, கண்டிரங்கியென்றே சொல்லத் தகும் என்றதாயிற்று. நம் பூருவாசாரியர்களுக்குப் பண்டைச் சங்க நூல்களிலும் இருந்த புலமை இதனால் அறிய எளிதாம். இது நிற்க.

பெரிய பண்டிதர்களென்று பேர்பெற்றவர்கட்கும் தோன்றாத அரும்பொருள்களை நம்பிள்ளை யெடுத்துக்காட்டுந்திறன் மிக மிக அதிசயிக்கத் தக்கதாம். அத்தகைய பொருள்களில் ஒன்றே காட்டுதும். திருவாய்மொழியில் பதினோருவது பதிகம்—'வைகுந்தா மணிவண்ணனே' என்று தொடங்குவது. இதில் (முதற்பாட்டில்) ஈற்றடி 'உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கெனவே' என்பதாம். 'எம்பெருமானே! என்னை நீ சிக்கெனப் பிடித்துக்கொள்' என்று பிரார்த்திக்க வேண்டியிருக்க 'உன்னை நான் சிக்கெனப் பிடித்தேன்' என்றது மாறுபாடாகத் தோன்றும். இங்கு நம்பிள்ளை யுணர்த்தும் மருமம் கேளீர். இப்பதிகத்திற்குக்கீழே கழிந்த *அந்தாமத்தன்பு செய்து* என்னும் பதிகத்திலே எம்பெருமான் ஆழ்வாருடனே வந்து கலந்து தான் பெறுப் பேறு பெற்றானாயிருந்தான்; அப்படியிருக்கையில் ஆழ்வார் 'அல்லாவியுள் கலந்த'

என்று தம்முடைய நைச்சியத்தைக் காட்டி, 'அந்தோ, பொருளல்லதாவென்னேடே இப்படிக் கலந்து கிடக்கிருனே பரமபுருஷன்!' என்று தலைசீய்த்துப் பேசினர். அதிலிருந்து எம்பெருமானுக்கு ஒரு கலக்கமுண்டாயிற்று. 'இவர் நைச்சியம் பாவிக்கத் தொடங்கிவிட்டாரே; நம்மைவிட்டு அகல்வர் போலிருக்கிறதே! இவரைப் பிரிந்து நாம் எங்ஙனம் தரித்திருப்பது' என்று. எம்பெருமான் இங்ஙனே கலங்கியிருக்கும் இருப்பையறிந்த ஆழ்வார் அப்பிரானது கலக்கம் தீர அவனுக்கு அபயமளிக்கிருர்- 'உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே' என்று. 'நான் உன்னை விட்டகல்வேனென்று மருண்டு அஞ்சாதே' என்று வார்த்தையைப் பூர்த்தி செய்து கொள்ளவேண்டும். இக்கருத்தை மணவாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் (பா.16.) "வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன், செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து,— நைகின்ற தன்மைதனைக் கண்டு உன்னைத் தான் விடேனென்றுரைக்க, வன்மையடைந்தான் கேசவன்' எ ற வெண்பாவினல் விளக்கியருளியிருப்பது காண்க. பகவான் கீதையில் "ஞானியை விட்டுப் பிரிந்து நான் ஆற்றகில்லேன்" என்று தானே வெளியிட்டிருக்குமதற்கு மிக இணங்கின பொருள் இது. ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் "மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய" என்றவுடனே அந்த மஹாத்மாக்களின் பெருமையை முன்னடிகளிற் சொன்னதிற் காட்டிலும் விலக்ஷணமாகச் சொல்ல விரும்பி "க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹ:" என்றருளிச் செய்ததும் ஈண்டு நினைக்கத் தக்கது. எம்பெருமானைப் பிரிந்து ஆழ்வார் படுமது பெரிதன்று; ஆழ்வாரைப் பிரிந்து எம்பெருமான் படும்பாடுதான் மிகப்பெரியது என்றுணர்த்தியவாறு.

இங்ஙனே பல நூற்றுக்கணக்கான அரும்பெரும் பொருள்கட்கு நிலமான திருவாய்மொழியைக் கொண்டு போதுபோக்குவது ஆழ்வார் மரபில் தோன்றிய வைணவர்கட்கு இன்றியமையாததாம். கூரத்தாழ்வான் தாமருளிச்செய்த வரதராஜஸ்தவத்தின் முடிவில் "ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி" என்னும் சுலோகத்தில்— ஸ்ரீராமாநுஜரை ஆளவந்தாருடைய குலவிளக்காகக் கூறி, ஆளவந்தாரை நாதமுனிகளின் குலக்கொழுந்தாகக் கூறி அந்த நாதமுனிகளைப்பற்றிக் கூறுகையில் (வம்ச்ய: பராங்குச முநேஸ் ஸ:) "நாதமுனிகள் நம்மாழ்வாருடைய திருவம்சத்தில் தோன்றியவர்" என்றருளிச் செய்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. ஆளவந்தாரை நாதமுனிகளின் குலத்தவராகக் கூறினதோடு, நாதமுனிகளை நம்மாழ்வாருடைய குலத்தவராகக் கூறினதோடு வாசியில்லையாயிற்று. நம் பரம வைதிக ப்ரமாசார்ய கோஷ்டியில் நம்மாழ்வார் இப்படியன்ரோ குலாவப்பட்டுள்ளார்...... இவ்வளவோடு அடியேனுடைய விண்ணப்பத்தை முடித்துக்கொள்ளுகிறேன்.●

## மாடக்கொடிமதிள் தென்குளந்தை வண்குடபால் நின்ற மாயக்கூத்தனைச் சிறிது அநுபவிக்கிறேன்.

**மாயக்கூத்தன்** = இதற்குப் பல படியாகப் பொருள் கூறலாம். கீதையில் *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா*என்று தானே சொல்லிவைத்தபடி குருவி பிணைத்த பிணைபோலே மாயப்பிணையொன்று பிணைத்து அதிலே எல்லாரையும்

மயக்கி இப்படியொரு கூத்துக்காண்பவன். அன்றியே, அந்த கீதையிலே**ஸம்பவாம் யாத்மமாயயா** என்றருளிச் செய்பபடிதயே ஸங்கல்பமென்னும் பொருளாதன மாயையினலே திருவவதாரங்கள் செய்து அவற்றிலே குடக்கூத்து, மரக்கால்கூத்து குரவைக்கூத்து என்னும்படியான பலவகைக்கூத்துக்களைச்செய்து "மாயக்கோலப் பிரான் தன் செய்கை நினைந்து மனங்குழைந்து" என்னும்படியாக்குமவன். அன்றியே, *சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கவேயங்கு ஓர் **மாயையினல்** வீட்டியவெண்ணெய் தொடுவுண்ணப் போந்து இமிலேற்று வன்கூன் கோட்டிடை யாடினை **கூத்து** அடலாயர்தம் கொம்பினுக்கே* (திருவிருத்தம்—21) என்கிறபடியே நம்போல்வார்க்கு நெஞ்சினலும் நினைக்க வொண்ணுததொரு மாயக்கூத்தைச் செய்பவனென்னவுமாம்.

வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசை கேட்டு நிற்பது, புண்ணில் புளிப்பெய்தாலொக்குந் தீமைகளை மனைதோறுஞ் செய்வது உருகவைத்தகுடத்தொடு வெண்ணெய் உறிஞ்சியுடைத்திட்டுப் போந்து அருகிருந் தார் தம்மை யநியாயஞ்செய்வது, இல்லம்புகுந்தொருமகளைக் கூவிக் கையில் வளையைக் கழற்றிக்கொண்டு கொல்லையில் நின்றுங் கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக்கவ்வளை கொடுத்து நல்லனநாவற்பழங்கள் கொண்டு நானல்லே னென்று சிரிப்பது, ஆற்றிலிருந்து விளையாடுபவர்களைச் சேற்ருலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு காற்றிற் கடியனுயோடி யகம்புகுவது, வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு விண்டோய் மரத்தேறுவது, மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவை கீறி நிச்சலுந்தீமைகள் செய்வது, தாயெடுத்த சிறுகோலுக்கு உளைந்தோடுவது, ஒளியாவெண்ணெயுண்டா னென்று உரலோடாய்ச்சி யொண்கயிற்ருல் விளியாவார்க்க வாப்புண்டு விம்மி யழுவது, கஞ்சனுங்காளியனுங் களிறு மருது மெருதும் வஞ்சனையில் மடியவளருவது, ஆயனுகியாயர்மங்கை வேயதோள் விரும்பியது, குன்றெடுத்தாநிரைகாத்து கோவலனுய்க் குழலூதியூதிக் கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு கலந்துடன் வருவது, சீமாலிகனவனோடு தோழமைக்கொண்டு சாமாறவனையெண்ணிச் சக்க ரத்தால் தலைகொண்டது, நாறியசாந்தம் நமக்கிறை நல்கென்னத் தேறியவளும் திருவுடம்பிற்பூச ஊறியகூனினையுள்ளே யொடுங்க ஏறவுருவியது, வார்கடம் வருவியானை மாமலையின் மருப்பிணைக் குவடிறுத்துருட்டி ஊர்கொள்திண்பாகனுயிர் செகுத்து அரங்கின் மல்லரைக்கொன்று போர்கடாவரசர் புறக்கிட மாடமீமிசைக் கஞ்சனைத் தகர்த்தது, பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்ப் பாரதம் கைசெய்தது, பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலைவளையத் திண்டேர்மேல் முன்னின்றது, பாழியால் மிக்க பார்த்தனுக்கருளிப் பகலவனொளி கெடப் பகலே ஆழியாலன்றங்காழியை மறைத்தது, கொல்லாமாக்கோல் கொலை செய்து பாரதப்போரெல்லாச் சேனையுமிருநிலத்தவித்தது, மாதவத்தோன் புத்திரன போய் மறிகடல்வாய்மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தது, படர்புகழ்ப் பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்டேர் கடவிச் சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில்வைதிகன் பிள்ளைகளை யுடலொடுங் கொண்டு கொடுத்தது முதலான மாயக்கூத்துக்கள் பலவும் இங்கு அநுஸந்திக்கவுரியவை.

# திவ்யப்ரபந்த மஹா நிதியைப்பற்றி.

திவ்யப்ரபந்த மஹா நிதியென்னும் பெயரால் நாம் எழுதிவந்த கட்டுரை மார்கழி மாதத்திலிருந்து எழுதுவதற்கும், அச்சிடுவதற்கும் ஸௌகரியமில்லாமலிருக்கிறது. இதற்குக் காரணம் அடியேனுடைய உடல்நிலைக் கோளாறுதான். மற்ற கட்டுரைகள் எழுதுவது போலன்று மேலே குறித்த மஹாநிதியையெழுதுவது. பல நீகோசங்களை அடுத்தடுத்துக் கண்டு எழுதவேண்டியதன்றோ அது. எழுதுவதற்கு அனுமதி கொடுத்திருக்கும் டாக்டர்கள் வாசிப்பதற்கும் அனுமதி கொடுக்கவேணும். அதற்கு, *மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணனையே வேண்டுகின்றேன். ........

## கடிதம்:-

## அநியாயக்கொலை.

ஸ்ரீ ராஜமன்னார் ஸன்னிதியென்கிற மன்னார்குடியில் தாயார்ஸன்னிதியில் 9—5—75 வெள்ளிக்கிழமை காலை நடந்த கோரமான கொலையும் லக்ஷக்கணக்கான விலையுள்ள திருவாபரணங்களின் களவும் உலகப்பிரசித்தமாயிருக்கின்றது. இதைப் பார்க்கும் போது, கோவில்களில் கைங்கரியம் பார்ப்பவர்களும் தரிசனம் செய்யப் போபவர்களும் போலீஸ் பந்தோபஸ்தோடு இருக்க வேண்டும் போல் தோன்றுகிறது. இப்போது நடந்த செயலின் மிக்க கொடுஞ்செயல் வேறொன்றிருப்பதாகத் தெரியவில்லை. சென்ற வருடத்தில் டில்லி மாநகரில் நடந்த கொலை சாமானியம் என என்னவேண்டியதாய்விட்டது.........ஒரு பக்தன்.

## திருச்செங்கனூர் ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை அவதாரஸ்தல ஸந்நிதி விமான மகா மண்டப ராஜகோபுர

# ஜீர்ணோத்தாரண பிரகடனப் பத்திரிகை

(சித்ரகூடம் ஸ்ரீ உ. வே. அ. வெ. ரங்காசாரியர் ஸ்வாமி அனுப்பியது)

பரம காருணிகனான ஸர்வேச்வரன் "கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினால் அருள் செய்து" இவ்விருள்தரு மாஞாலத்துக்கு அணி விளக்காக அநேக விதமான சாஸ்த்ரங்களை உபகரித்தருளினான். அவற்றுள் வேதசாஸ்த்ரமே மூலப்ரமாணம். அது வடமொழி வேதமென்றும் தென்மொழி வேதமென்றும் பாகுபாடுற்றது. அந்த வடமொழி வேதத்திற் காட்டிலும் பலவகையிலும் சீரும் சிறப்பும் பெற்ற தமிழ் வேதத்திற்கு ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை என்னும்—மஹாசார்யர் பரம ரஸகனமான வியாக்கியானத்தை இட்டருளி இருளையும் மருளையும் போக்கித் தமிழ் உலகத்துக் கைம்மாறிலாத பேருதவியைச் செய்தார்.

ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு வ்யாக்யானம் இட்டருளும் திருப்பணியில் "பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத்திருவீதிப்பிள்ளை, மணவாளயோகி திருவாய்மொழியைக் காத்த குணவாளர்" என்றபடி பல ஆசார்யர்களும் ஈடுபட்டதுண்டு. எனினும், நாலாயிரம் பாசுரங்களுக்கும் பூர்த்தியாகத் தேனும், பாலும், கன்னலும், அமுதுமான மிகச் சிறந்த வியாக்யானம் இட்டருளிய பெருமை இவ்வுரையாசிரியர் ஒருவர்க்கே அஸாதாரணமாக அமைந்ததாகும். இதை விசதவாக் சிகாமணியான ஸ்ரீமந்மணவாள மாமுனிகள் "பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும் தெரிய வியாக்கியைகள் செய்வால் அரிய அருளிச் செயற்பொருளை யாரியர்கட் கிப்போதருளிச் செயலாய்த் தறிந்து" என்ற பாசுரத்தினால் உலகுக்கு உணர்த்தியுள்ளார்.

இவ்வாசிரியரின் வ்யாக்யான சைலி அனுபவிக்க அனுபவிக்க அனைவரையும் ஆனந்தக்கடலில் ஆழ்த்தும். த்ராவிட வேத பாஷ்யகாரரான ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளையின் கம்பீரமான ஸ்ரீஸூக்திகள் ஒவ்வொன்றும் முமுக்ஷுக்களுக்கு ரஸாயனமாயிருக்கும். மற்றையோர் பத்தெட்டு வாக்யங்களினால் விரிய உரைக்கும் பொருளைச் சிறியதொரு சொற்றொடரினால் மிக அழகாகவிளங்க வைக்கும் திறம் இவர்க்கே உரியதனிச் சிறப்பாகும்.

இவர் அருளிச்செய்த க்ரந்தங்கள் திருவாய்மொழி வ்யாக்யானமான இருபத்து நாலாயிரப்படி, மற்றமூவாயிரம் பாசுரங்களுக்கு வியாக்யானம், பரந்த ரஹஸ்ய விவரணம், மாணிக்க மாலை, நவரத்ன மாலை, ஸகலப்ரமாண தாத்பர்யம், உபகாரரத்னம், ஆளவந்தார் ஸ்தோத்ரவியாக்யானம், கத்யத்ரய வியாக்யானம், அபயப்ரதானஸார வியாக்யானம், சரமரஹஸ்யம், அநுஸந்தான ரஹஸ்யம், நிகமனப்படி, ரஹஸ்யத்ரய விவரணம், தத்வத்ரய விவரணம், தனிச்லோகம், பாசுரப்படி ராமாயணம், ஸ்ரீராமாயணத்தில் பல சுலோகங்களுக்கு இன்சுவைபோவடிவெ

டுத்த உரை முதலியன. இவைகள் இவருடைய அப்ரதிமமான பாண்டித்யத்தையும், அப்ரமேயமான மேதாப்ரதிபா விலாசத்தையும் புலப்படுத்துகின்றன. கடல் ரத்னாகரமென்று பெயர்பெற்றிருத்தல் போல இவ்வாசிரியரது வியாக்யானக்கடல் எண்ணிறந்த விசேஷார்த்தரத்னநிதியாகப் புகழப்படுகிறது. ஸ்ரீஆளவந்தார், எம்பெருமானார், பட்டர், நஞ்ஜீயர், நம்பிள்ளை முதலான பூர்வாசார்யர்கள் அருளிச்செயலுக்கு ஆங்காங்கு அழகாக நிர்வஹித்துக் கொண்டிருந்த அமுதிலும் இனிய அர்த்த விசேஷங்களை எல்லாம் இவ்வாசிரியர் ஸ்ரீவைஷ்ணவ உலகுக்கு எடுத்தூட்டி இருக்கிறார். எனவே இவருடைய வியாக்யானங்கள் ஸகலபூர்வாசார்ய ஸ்ரீஸூக்திஸாரம் எனத்தகும். இவ்வாசிரியர் அவதரியாதிருப்பின் இவ்வுலகுக்கு ஆனந்தானுபவம் மிகவும் குன்றியேஇருக்கும்.

திருவேங்கடமுடையான் ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளைக்கு ஸேவை ஸாதிக்க எழுந்தருளி, அவர் ப்ரார்த்தனைக்கிணங்கக் கோயில்கொண்டு இன்னும் நமக்கு மிக் அற்புதமாக ஸேவைஸாதிக்கிறார். இத்திருக்கோயிலின் விமானம் ராஜகோபுரம். மஹாமண்டபம், திருமடைப்பள்ளி முதலியன மிகவும் பழுதுற்றுள்ளன. இவைகளை உடனே பழுது பார்த்து அஷ்டபந்தன மஹாஸம்ப்ரோக்ஷணம் செய்விக்க வேண்டுவது மிகவும் அவசியமாக உள்ளது. மேலும் இப்பேராசிரியரின் புகழுக்கு ஒப்ப ஒரு பட்டி மண்டபமும் கட்டவேணடியுள்ளது. இச்சீரிய பணியினைச்செய்து முடிக்க; இந்துசமய அறநிலைய ஆட்சித்துறையினர், ஸ்ரீ. உ. வே. காஞ்சி மகாவித்வான் மஹாமஹிமோபாத்யாய பத்மவிபூஷண அண்ணங்கராசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. ந்யாயவேதாந்த வித்வான் வாகபருதவர்ஷி, வேளுக்குடிவரதாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. வித்வான் புத்தூர் S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி அட்வகேட் (ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம் பத்ராதிபர்) ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீயந்நாராயண ராமாநுஜஜீயர் ஸ்வாமி, ப்ரம்ம ஸ்ரீமஹாத்மா க்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் போன்றவர்களைப் போஷகர்களாகக் கொண்ட திருப்பணிக்குழுவினையும், ரூ. 56,000க்கான மதிப்பீட்டினையும் அங்கீகாரம் செய்துள்ளனர். திருப்பணியின் முதற்படியாக திருவெண்ணாழி, திருமதிள்கள் திருப்பணிபூர்த்தியாகி, விமானவேலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. பக்திமான்களும், தமிழ் அன்பர்களும், தர்மஸ்தாபனங்களும், தாராளமாக நிதி உதவியளித்து, இக்கைங்கர்யத்தைப் பூர்த்தி பண்ணுவிக்கவேண்டும். இப்பணிக்கு அளிக்கும் நிதிஉதவிக்கு இந்திய அரசாங்கம் வரிவிலக்கும் அளித்துள்ளது. நிதிஉதவி அளிப்போர் A. V. ரங்காசாரி, M. A. M. Litt. திருப்பணிக்குழு தலைவர் 105, மேலவீதி, சிதம்பரம் என்றமுகவரிக்கு அனுப்பி ரசீது பெற்றுக் கொள்ளவேணும்.

## ஸ்ரீ ராமாயணச்லோக விசேஷத்தின் அர்த்த விசேஷம் *(P. B. A.)*

இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ,
ப்ரதீச்ச சைநாம் பத்ரம் தே பாணிம்க்ருஹ்ணீஷ்வ பாணிநா.

(ஸ்ரீராமாயணபாலகாண்டத்தில், ஜனகசக்ரவர்த்தி பிராட்டியைப் பெருமாளுக்குக் கன்னிகாதானம்பண்ணும் போது சொல்லும் சுலோகமிது.)

ஜனகசக்ரவர்த்தியானவர் மற்ற அரசர்களைப்போன்றவரல்லர்; யாஜ்ஞவல்க்ய மஹர்ஷி பக்கலிலே நெடுநாள் சாஸ்த்ரார்த்த தத்துவங்கள் கேட்டவர். பெரியாழ்வார் திருமொழியில் (4-1-2) *வேந்தர்தலைவன் சனகராசன்தன் வேள்வியில்

கண்டாருளர்* என்றவிடத்து *வேந்தர் தலைவன்* என்பதற்கு "வேதாந்தர் தலைவன்" என்றும் பொருள் கூறுவதுண்டு வேதாந்த தத்துவமறிந்தவர்களில் தலைவர் என்றபடி. அப்படிப்பட்ட ஜனகமஹாராஜர் ஸீதா பிராட்டியின் அவதாரரஹஸ்யத்தை அறியாதவரல்லர். உண்மையில் ஸீதாபிராட்டி தம்முடைய திருமகள் அல்லள் என்றும், ஸ்ரீமஹாலக்ஷ்மியே இங்குவந்து உறைகின்றுளென்று முணர்ந்தவரான ஜனகசக்ரவர்த்தி "இயம் ஸீதா மம ஸுதா" என்று சொல்லத்தகுமோ? ஸ்ரீ ராமா! நாராயணனுகிய உன்னுடையதிருத்தேவி இங்கே ப்ராதுர்ப்பவித் திருக்கின்றுள்; இவளைக் கைப்பற்றிக்கொண்டு போகவேணும்' என்றுசொல்ல ப்ராப்தமாயிருக்க; "இவள் என்மகள்; இவளை நீபாணிக்ரஹணம் செய்து கொள்ளவேணும்" என்னலாமோ?

சுருக்கமான ஸமாதானம் கேண்மின். சக்ரவர்த்திதிருமகன் ஸாக்ஷாத் நாராயணன் என்பது நிர்விவாதம். வால்மீகி மஹர்ஷிதாமும் அயோத்யாகாண்ட உபக்ரமத்தில் *ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:* என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்திருக்கிருர். அப்படியிருந்துப் இராமபிரான் தனக்கு நாராயணத்வத்தை மேம்பாடாகக் கொள்ளாமல் *ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்* என்று (யுத்தகாண்டமுடிவில்) கூறியிருப்பது ப்ரஸித்தம் இதில் (மந்யே) என்பதற்கு (பஹுமந்யே) என்று பொருள் தேவாதிதேவத்வத்திற் காட்டிலும் மநுஷ்யத்வத்தையே மேம்பாடாக நினைக்கிறேனென்றபடி. அதற்கிணங்கவேயன்றோ நடித்தது. ஆக, ஸ்ரீராமபிரானுக்கு தேவதாஸார்வபௌமத்வத்திற் காட்டிலும் மநுஷ்யத்வம் எப்படி ஸ்ப்ருஹணீயமாயிற்றோ, அப்படி ஸீதா பிராட்டிக்கும் லக்ஷ்மீத்வத்திற்காட்டிலும் ஜநகாத்மஜாத்வமே மிகவும் ஸ்ப்ருஹணீயமாயிற்று. இதைத் தெரிந்துகொண்டே ஜநகசக்ரவர்த்தி *இயம் ஸீதா மம ஸுதா* என்றுர். பிராட்டிதானும் மேலே *ஸ்நுஷா தசரதஸ்யாஹம் சத்ருஸைந்ய ப்ரதாபிந:, துஹிதா ஜநகஸ்யாஹம் வைதேஹஸ்ய மஹாத்மந:* என்றுள். அவளுடைய உட்கருத்தையுணர்ந்து அதற்கிணங்கப் பேசினபடி. இதற்குமேல் [ஸஹதர்மசரீ தவ] என்றதைச் சிறிதுவிவரிப்போம். இக்காலத்தில் பாணிக்ரஹண மங்களம் நடைபெறும்போது வரன் வதுவைப் பரிக்ரஹிக்கும்போது "இமாம் கந்யாம் தர்மப்ரஜார்த்தம் வ்ருணீமஹே" என்று சொல்லிப்பரிக்ரஹிக்கிறுன். உலகத்தில் க்ருஹஸ்தன் க்ருஹிணியோடுசேர்ந்து செய்யும் தர்மாநுஷ்டானம் தெரிந்ததே. இராமபிரான் பிராட்டியோடு சேர்ந்து செய்யும் தர்மாநுஷ்டானம் எது? எந்ததருமத்தை யுத்தேசித்து ஜநகசக்ரவர்த்தி "ஸஹதர்மசரீ தவ" என்றுர்? என்று விமர்சிக்கவேணும். விமர்சிப்போம். இது பிராட்டியின் திருவாக்கினுல் வியாக்கியானிக்கப் பட்டிருப்பது கேளீர்! பிராட்டி அசோகவனத்தில் இராவணனுக்கு ஹிதோபதேசம் பண்ணுகையில் *விதித ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:, தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி* என்கிறுள். இதில் சக்ரவர்த்திதிருமகனை (தர்மஜ்ஞ:) என்று முந்துறமுன்னம் சொல்லி, உடனே அதற்கு விவரணமாக "சரணாகத வத்ஸல:" என்கையாலே சரணாகத பரித்ராணமே பெருமாளுக்கு தருமமென்றதாயிற்று.

வேதாந்த தேசிகன் தசாவதாரஸ்தோத்ரத்தில் ஸ்ரீராமாவதாரத்திற்கிட்ட சுலோகத்தில் "ஸர்வாவஸ்த ஸக்ருத்ப்ரபந்நஜநதாஸம் ரக்ஷணைகவ்ரதீ தர்மோ விக்ரஹவாந் அதர்மவிரதிம் கந்வீ ஸ தந்வீத ந:" என்றது இங்கே அநுஸந்தேயம். பிராட்டியின் ஸஹயோகமில்லாவிடில் பெருமாளால் சரணாகத பரித்ராணம் பண்ண முடியாதென்பது தீர்ந்தபொருள். இதுபற்றி அடுத்த இதழில் விவரிப்போம்.

# சதாபிஷேக நிகழ்ச்சி



ஸ்ரீ உ. வே. (திருக்கண்ணபுரம்) T. S. ராமானுஜய்யங்கார் ஸ்வாமியின் சதாபிஷேக வைபவம் பங்குனி மீ 16-ந்தேதி (30-3-75) அன்று முந்திய மூன்று நாட்களில் உபய வேத பாராயணத்துடன் மீன விசாகத்தில் பம்பாயில் விக்ரோலி எனனுமிடத்தில் அவர் குமாரர் ஸ்ரீ T. R. சடகோப ஐயங்கார் க்ருஹத்தில் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க்கையின் நெறிமுறைகளை மிகவும் சீராகக் கடைப்பிடித்து வந்துள்ள இவர் பிறருக்குச் செய்துள்ள உபகாரங்கள் எண்ணிலடங்கா.



(வைகுண்டவாஸியான) வித்வான் ஸ்ரீ பட்டப்பா ஸ்வாமியின் தமையனார் (திருக்கண்ணபுரம் ஸந்நிதி பெரிய மணியகாரராயிருந்தவர்) ஸ்ரீனிவாஸய்யங்கார் ஸ்வாமியின் குமாரரான இவர் திருக்கண்ணபுரம் ஸ்ரீ சௌரிப்பெருமாளின் தோளுக்கினியானின் கைங்கர்யத்திலும் பங்கு பெற்றிருக்கிறார். (T. M. ஸ்ரீநிவாஸாசாரியார், Bombay)

# புத்தக வெளியீடு.

★

அமுதனைய அருளிச்செயலை உலகுக்களித்த எண்ணருஞ்சீர்ப் பொய்கை முதலாம் ஆழ்வார்களுடையவும் அவ்வருளிச்செயலைப் போற்றிக்காத்த ஆசார்யர்களுடையவும் வைபவங்களை அறிந்துய்தல் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவர்க்கும் இன்றியமையாதது. ஏற்கனவே ஸ்ரீஸ்வாமி வெளியிட்டிருந்த ஆழ்வார்கள் வைபவம் கிடைப்பரிதாயிருந்தது. தற்போது "குருபரம்பராப்ரபாவ ஸாரம்" என்ற நூல் ஆழ்வாராசாரியர்களின் வைபவத்தைத் தன்னுட்கொண்டு வெளிவந்துள்ளது. எளிய இனிய தமிழில் ஸ்ரீ ஸ்வாமி எழுதியுள்ள இந்நூல் ஆஸ்திகர்கட்குப் பெரிதும் பயன்படும் என்னும் எண்ணமுடையோம்.

தி. அ. அனந்தாழ்வான்.

கிடைக்குமிடம் :—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-631503.

விலை ரூ. ஐந்து

# ஈட்டுப்பதிப்பைப் பற்றி



★

திருவாய்மொழி (மூன்று வியாக்கியானங்களுடன்) முதலிரண்டு பத்துக்கள் வெளிவந்துள்ளதை அன்பர்கட்கு ஏற்கனவே அறிவித்துள்ளோம். நான்காம்பத்து முடியும் தருவாயிலுள்ளது. விரைவில் மூன்று நான்காம் பத்துக்களைக் கொண்ட புத்தகம் வெளிவரும். இப்பதிப்புக்கு நன்கொடை யளித்துள்ளவர்களின் திருநாமங்களை முன்னமே வெளியிட்டுள்ளோம். அதன்பின் வரவுகளைக் கீழே காண்க.

| | | |
|---|---|---|
| ஸ்ரீமான் V. S. R. சக்ரவர்த்தி, சென்னை | | ரூ. 1001 |
| K. A. தேவராஜன், | ,, | 100 |
| Hon'ble Justice A. Alagiriswami, (Supreme Court Judge) | | 100 |
| R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், நேமத்தான்பட்டி | | 200 |
| K. A. ஷண்முக முதலியார், திருப்பத்தூர் | | 250 |
| K A. காளியப்ப முதலியார் | .. | 100 |
| N. K. ஸ்ரீநிவாஸன், பெங்களூர் | | 101 |
| ஏத்தக்குடி ஸ்ரீநிவாஸாசாரியர், மன்னார்குடி | | 100 |

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்.
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.



If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM Pin Code-631503

To

Sriman / ...thi



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-631503.

Regd. No. 2975 ஸ்ரீ

# ஸ்ரீ ராமாநுஜன் 322, 323

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.



# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM–631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.



1975௵ சித்திரை, வைகாசிமீ